ரிஜிஸ்டர் நெ. M. 4514

விலை 2 அணு

"1 மைல் அகலமேயுள்ள குறுகிய இந்த இடத்தில், ஒருநாளில் 2000 டன் வெடி குண்டுகள் பொழிந்தனர். வெடி குண்டுகள் விட்டுவைத்தகற்கவை எதிர்த்து 2டிவிஷன்கள், 10 பேன்ஸர்கள். அவைத்தையும் ரஷ்யர்கள் தாக்குப்பிடித்தனர். இது ஸ்டாலின் கிராடு தற்காப்பில் 1 நாள்."

—'யுஜீன் க்ரிகர்'

# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி

தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

"பிழைத்திருந்தால், என் குழந்தைகளை இங்கு கூட்டி வருவேன். இங்கு புதிய, இன்னும்அழகியஸ்டாலின் கிராடிருக்கும் "இதோ இங்கு ஒரு ஊரை எதிர்த்து ஐரோப்பாக் கண்டமே சண்டையிட்டது நான் கண்ணாரப் பார்த்தேன்" என்பேன். என்ன?

—எஸ். நாகர்ணி,

இதழ் 25 | 24-3-1943 புதன்கிழமை | ஆசிரியர்: பி. ராமமூர்த்தி

# நாசவேலைக்கு காங்கிரஸ்மீது பழி

## அதிகார வர்க்கத்தின் அபாண்ட பிரசாரம்

இந்த ஆறுமாதங்களாக நாடெங்கும் நாசவேலைகள் நடந்து வருகின்றன. இதற்கு ஜவாப்தாரி யார்? காங்கிரஸ்தான் என்று சொல்லுகிறது இந்திய சர்க்கார். திரும்பத்திரும்பப் பறையடித்து வந்திருக்கிறது. அதை நிரூபிக்கிறோம் என்கிறது. அதற்கென்று 86 பக்கங்கள் கொண்ட ஒரு புஸ்தகத்தையும் வெளியிட்டிருக்கிறது.

அந்த புஸ்தகத்தை திரும்பத் திரும்ப வாசித்தோம். அந்தக் குற்றச்சாட்டிற்கு எவ்வித ஆதாரத்தையும் அதில் காணோம்; ஆதாரங்கள் அவசியமாக இருக்கும் இடத்தில் அடித்துப் பேசுகிறது. ருஜுக்கள் தேவையான இடத்தில் வெறும் குற்றச்சாட்டைத்தான் குவிக்கிறது. நடந்த சில விஷயங்களை திரித்துக் கூறுகிறது. இருந்த சில பத்திரங்களின் முக்கிய பாகங்களை ஒளித்துச் சொல்கிறது. காந்திஜி அஹிம்சைவாதியாயிற்றே என்றால் அதை அலட்சியம் செய்யுங்கள் என்று உபதேசிக்கிறது. முழுதும் முன்னுக்குப் பின் முரணாக இருக்கிறது.

புஸ்தகத்தின் முடிவில் காங்கிரஸ் தீர்மானங்கள் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன. தேசத்தில் பெரிய பாசிஸ எதிர்ப்பு சக்தியை கவர்மெண்டு தாக்கிற்று என்பதையே அவை சுட்டிக் காட்டுகின்றன. அரசாங்கத்தின் குற்றச்சாட்டென்ன? காங்கிரஸ் தேசபக்தி கொண்ட ஸ்தாபனமென்பதுதான்.

இவ்வளவு பொய்களுடன் இந்த புஸ்தகத்தை இச்சமயத்தில் எதற்காக இந்திய சர்க்கார் பிரசுரித்தது? காந்திஜீயின் விடுதலைக்காக மக்களின் கிளர்ச்சி வலுத்து வருகிறது. கவர்மெண்டை மேலும் மேலும் நெருக்குகிறது. அக்கோரிக்கையை மறுப்பது முடியாத காரியமாய் வருகிறது. உலகத்தில் வெவ்வேறு நாடுகளிலிருந்தும் இக்கோரிக்கை கிளம்பி யிருக்கிறது. இந்த நிர்ப்பந்தத்தை சமாளிக்க, காங்கிரஸின் மீது ஒரு பெரிய குற்றத்தை சுமத்தவேண்டும். காந்திஜீயை விடுதலை செய்யாமலிருப்பதற்கு சாக்குகள் சொல்லவேண்டும். காங்கிரஸுடன் சமரசம் செய்து கொள்ளக்கூடாது. அதற்குக் காரணங்கள் கற்பிக்கவேண்டும். அதற்கே இந்த புஸ்தகம்.

### குற்றச்சாட்டு

இப்புஸ்தகத்தை விரிவாகக் கவனிப்போம். கவர்மெண்டின் குற்றச்சாட்டுத்தான் என்ன? "காந்திஜி ஹரிஜனில் எழுதியவற்றினால் ஏற்பட்ட நிலைமையும், தெரிந்த காங்கிரஸ்வாதிகள் பலாத்காரச் செய்கைகளில் ஈடுபட்டதும், காங்கிரஸ் துண்டுப் பிரசுரங்களும்—அவற்றிற்கு அத்தாட்சிகள் இருக்கின்றன—இவை எதைக் காட்டுகின்றன? அது காந்திஜியின் தலைமையின் கீழ் காங்கிரஸ் தான் நாட்டின் குழப்பத்திற்கு பொறுப்பு என்பதையே" இதுவே இப்புஸ்தகத்தின் முடிவு.

பொதுஜனங்களுக்கு தெரியாமலில்லை. 1942-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 23-ந் தேதி வைஸ்ராய்க்கு காந்திஜீ ஒரு கடிதம் எழுதினார். அஹிம்சையில் தனக்குள்ள அபார பிடிப்பை மீண்டும் அதில் வற்புறுத்தி யிருந்தார். அதை சர்க்கார் ஏன் பிரசுரிக்கவில்லை? பிரசுரித்திருந்தால் தேசபக்தர்கள் நாசவேலைகளில் மீண்டும் ஈடுபட்டிருப்பார்களா! ஐந்தாம்படையினர், நாசவேலைக்கு காந்திஜியின் பெயரை உபயோகப்படுத்தி யிருக்க முடியுமா! நாசவேலை நின்றிருக்கும்; ஐந்தாம்படைக்கு ஆதரவில்லாது போயிருக்கும். ஆகவே அக்கடிதத்தை அமுக்கிவைத்திருந்ததுதான் நாசவேலை தொடர்ந்து நடந்ததற்குக் காரணம். இதை கவர்மெண்டு மறுக்க முடியாது.

### ஆதாரமற்ற அத்தாட்சி

நாசவேலைகளுக்குத் தூண்டியது காங்கிரஸ்வாதிகள் என்று இப் பிரசுரம் கூறுகிறது. இதே பிரசுரத்தில் 30-வது பக்கத்தைப் பார்த்தால் இதற்கு எதிர்மாறாக ஒன்று சொல்லுகிறது.

"இந்தக் குழப்பத்தில் பங்கெடுத்துக் கொண்ட முக்கியமான காங்கிரஸ்வாதிகளின் எண்ணிக்கை மிகச் சொற்பம். ஏனெனில் முக்கியமானவர்களையெல்லாம் ஆரம்பத்திலேயே கைதி செய்துவிட்டோம். இருந்த சிலரும் தலைமறைவாக இருக்கவேண்டியதாயிற்று".

இதை ஒப்புக் கொள்கிறது அதிகார வர்க்கம். ஆனால் அதற்குப் பிறகு அதன் வாதங்கள் "நீ செய்யவில்லை யென்றால் உங்கள் அப்பன் பாட்டன் செய்திருப்பான்" என்று கூறிய ஓநாயின் கதையை ஞாபகமூட்டுகிறது. "தங்கள் ஊருக்குள் மட்டும் தெரிந்த காங்கிரஸ் வாதிகள் செய்தார்கள்; காங்கிரஸ் வாதிகளின் உறவினர்கள் செய்தார்கள்" என்ற இவ்வளவு கீழ்தரமான வாதங்களுக்குப் போகிறது. சில உதாரணங்களைப் பார்ப்போம்,

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கூட்டம் முடிந்ததும் முக்கிய காங்கிரஸ் வாதியின் குமாரர் ஒருவர் வார்தாவிற்கு வந்து காங்கிரஸ்திட்டத்தை (அதை எப்படி காங்கிரஸின் திட்டம் என்று முடிவு கட்டினார்களோ அது நமக்குத் தெரியவில்லை) பொதுக்கூட்டத்தில் கூறினார்: அதில் வேலை நிறுத்தங்களும் இருந்தன.

அதே நாள் வார்தா காமர்ஸ் காலேஜில் ஒரு புரபொஸர் வேலையை ராஜிநாமா செய்தார்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலிருந்து மதராஸிற்குத் திரும்பிய இருவர் ஜனங்களை பிரசங்கத்தில் போராட்டத்திற்கு பகிரங்கமாகத் தூண்டினர்.

இவையெல்லாம் காங்கிரஸ்தான் நாசவேலையைத் தூண்டிற்று என்பதற்கு ருஜுக்கள்! வார்தா என்றதும் காந்தி ஆசிரமத்திலுள்ள பொறுப்பான யாராவது இதில் சம்பந்தப்பட்டதாக அத்தாட்சிகள் காண்பிக்கும் என்று எதிர்பார்த்தோம்; ஆனால் காங்கிரஸ்காரரின் பிள்ளை செய்தாரென்று காங்கிரஸ் ஸ்தாபனத்தின் மீது குற்றச்சாட்டு. வார்தா புரபஸருக்கும் காங்கிரஸுக்கும் உள்ள சம்பந்தமெல்லாம், காந்தீஜி கைதியானதும் அவர் ராஜீநாமா செய்த ஒரே செய்கைதான்; மதராஸில் பேசியவர்கள் காங்கிரஸ்காரர்கள்தானா என்று கூடத் தெரியவில்லை. இம்மாதிரி முழங்காலுக்கும் மொட்டைத் தலைக்கும் முடிச்சுப்போடுகிறது இப் பிரசுரம்.

### துண்டுப் பிரசுரங்கள்

மறுக்க முடியாத அத்தாட்சிகளில் ஒன்று காங்கிரஸின்பெயரால் வெளிவந்த துண்டுப்பிரசுரங்கள். அப்பிரசுரங்களில் 'பூர்ஷ்வா, பிராலிடாரியட், வர்க்கப் போராட்டம்' என்ற பதங்கள் மலிந்துகிடக்கின்றன. காங்கிரஸ்காரர்கள் கொள்கைகளுக்கும் அதற்கும் எள்ளளவும் சம்பந்தம் கிடையாது. இது வெளிநாட்டு மக்களை வேணுமென்றால் கொஞ்சம் ஏமாற்றும். அதுவும் இந்தியாவைப்பற்றி அதிகமாகத் தெரியாத மக்களைத்தான். இவை காங்கிரஸின் பெயரை உபயோகித்து ஐந்தாம் படை வேலைசெய்யும் ட்ராட்ஸ்கிக் கூட்டம், காங்கிரஸ் சோஷலிஸ்ட்டுகள் இவர்களுடையதாயிருக்க வேண்டும்.

### உள்ளதை ஒளிக்கிறது

ஜெயபிரகாஷ் நாராயணனின் கடிதமும் அதில் கொண்டுவரப்படுகிறது. அவருக்கு காங்கிரஸில் பதவியிருக்கிறது. அதனால் அவர் சொல்வதெல்லாம் காங்கிரஸின் திட்டம் என்று முடிவுகட்டுகிறது. ஆனால் அக்கடிதத்தில் ஒரு பகுதியை இப்பிரசுரம் பொதுமக்களிட மிருந்து மறைக்கிறது. அது கீழ் வருமாறு:

"காந்திஜீ எக்காரணத்தைக் கொண்டும் அஹிம்சையை கைவிடத் தயாராயில்லை" ஜெயபிரகாஷ் பார்வர்ட் பிளாக்கை தழுவிக்கொண்டு வருகிறார் என்பதை மக்களிடமிருந்து மறைக்கிறது. மேலே கொடுத்திருக்கும் வாக்கியத்தை ஒளிக்கிறது. இவ்வளவு மோசமான முறைகளையும் கையாளுகிறது.

டோகியோ ரேடியோவில் வந்த விஷயங்கள் காந்திஜியின் பெயரால் பரப்பப்பட்டது; அது தெரியாதது போல் அரசாங்கம் அதையும் காங்கிரஸின்மீது சுமத்துகிறது. காங்கிரஸை ஐந்தாம்படை என்று கூறும் அவசரத்தில் ஆதாரமற்ற இவற்றையும் அதில் சேர்த்திருக்கிறது.

ஆந்திர காங்கிரஸ், போராட்ட திட்டம் கொடுத்ததாகக் கூறுகிறது. அதில் அஹிம்சைக்கு புறம்பான தொன்றும் செய்யக் கூடாதென்று அழுத்தம் திருத்தமாகத் தெரிவித்திருக்கிறது. தண்டவாளங்களை தகர்க்கக் கூடாதென்று கண்டிப்பாகக் கூறியிருக்கிறது. இப்புஸ்தகம் ஆயிரக்கணக்கான மக்களை வெட்டி வீழ்த்தும்படி கூறிய விளம்பரமாக அதை பறைசாற்றுகிறது.

### திரித்துக் கூறுகிறது

எல்லாவற்றையும் எடுத்து விழுங்கும் வாதம், காந்திஜீயின் அஹிம்ஸையை அலட்சியம் செய்யும்படி அதில் கூறுவது தான்.

ஹரிஜனில் காந்திஜி எழுதியதில் இப் பிரசுரம் வற்புறுத்துவது "இது பொதுஜனப் போராட்டமாக விருக்கும். பொதுஜனப் போராட்டத்தில் அனுமதிக்கப்படும் அனைத்தும் இதில் இருக்கும்".

உண்மையில் ஹரிஜனில் காந்திஜி எழுதிய வாக்கியம் 'ஆனால் அது கண்டிப்பான அஹிம்சையை அடிப்படையாகக் கொண்ட பொதுஜனப் போராட்டம்; விவரங்களை நீங்களே பூர்த்திசெய்து கொள்ளுங்கள்."

இப்படி முழுப்பூசனிக்காயை சோற்றில் மறைக்கப்பார்க்கிறது!

தலைவர்கள் எல்லோரும் ஒவ்வொரு மூச்சிற்கும் 'அஹிம்சை' என்று எச்சரித்தார்களேயென்றாலும், நாசவேலைகள் நடைபெற்றதால் அவர்களது நேர்மையையே சந்தேகித்து அவர்களது எச்சரிக்கையை அலட்சியம் செய்யுங்கள் என்கிறது இப் புதுமைப் பிரசுரம்.

குவித்த அவதூறுகள் போதாதென்று இன்னுமொரு அபாண்டத்தையும் சொல்கிறது. காந்திஜி ஜப்பானுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளத்தயாராயிருந்தார் என்று. அதே சமயத்தில் அதில் கொடுக்கப்பட்டிருக்கும் காங்கிரஸ் தீர்மானம் ஜப்பானிய பாஸிஸத்தை எதிர்த்து நிற்கிறோம் என்ற உறுதியை வலியுறுத்தியிருக்கிறது. மற்ற நாட்டு மக்களுக்கு அதிகாரவர்க்கத்தின் குட்டு தெரியாமலில்லை.

### ஐந்தாம் படைகளைப் பற்றி பேச்சு மூச்சில்லை

ஆனால் இதில் ஒன்றுமட்டும் நம்மை திகைக்கச் செய்கிறது. ஐந்தாம்படையின் நாசவேலைகளைப் பற்றி ஒரு வார்த்தை கூட இல்லை. இந்தியாவில் ஐந்தாம்படை இருக்கிறது; அதை உலகமக்களிடமிருந்து மறைக்கிறது இப்பிரசுரம். ஏன்! இது வரை காங்கிரஸ்தான் ஐந்தாம் படை என்று புளுகிவந்திருக்கிறார்கள். தேசீய கோரிக்கையை மறுப்பதற்கு அந்தப் பொய்யை சர்வசாதாரணமாக சொல்லி வந்தார்கள். வங்காளத்தில் ஐந்தாம் படைகளின் வேலையைக் குறிப்பிடவேயில்லை. இது ஒரு பெரிய அபாயம்.

இந்தியாவிற்கு ஐந்தாம் படைகளினால்

(8-ம் பக்கம் பார்க்க)

**காந்திஜி எழுதியது:**

*காங்கிரஸ் தலைவர்களை ஒருவர் விடாமல் ஒரேயடியாக கைது செய்தது மக்களுக்கு அசாத்திய ஆத்திரத்தை மூட்டியிருக்கிறது; பொறுமையிழக்கச்செய்தது.*

*சகல அழிவிற்கும் பொறுப்பு சர்க்கார்தான், காங்கிரஸ் அல்ல என்று எனக்குத் தோன்றுகிறது.*

*சர்க்காருக்கு சரியான வழி காங்கிரஸ் தலைவர்களை விடுதலை செய்து, அடக்குமுறையை நிறுத்தி சமரசத்திற்கு எல்லா முயற்சிகளும் எடுத்துக் கொள்வதுதான்.*

(இந்திய சர்க்காரின் காரியதரிசிக்கு 1942 செப்டம்பர் 23-ந் தேதி எழுதிய கடிதத்திலிருந்து எடுத்தது.)

ஜனசக்தி

24-3-1943 புதன்கிழமை

# மதுரையில் அடக்குமுறை

தமிழ்நாட்டில் கம்யூனிஸ்டுகளைக் கைது செய்வதில் மதுரை அதிகார வர்க்கம் முதல் பிரைஸ் வாங்கிவிட்டது. சென்ற ஆகஸ்டு மாதத்தில் தேசீய இயக்கத்தின் மேல் அதிகாரவர்க்கம் பாய்ந்த போது அநேக கம்யூனிஸ்டுகள் மதுரையில் அரெஸ்டு செய்யப்பட்டனர். இன்னும் அவர்கள் வேலூர் சிறையிலும் பாளையங்கோட்டைச் சிறையிலும் பாதுகாப்புக் கைதிகளாக வைக்கப்பட்டிருக்கின்றனர்.

தோழர் சங்கரய்யா மாகாண மாணவர் சம்மேளனக் காரிய தரிசி. மதுரையில்தான் இருந்தார். அக்டோபர் மாதத்தில் திடீரெனக் கைது செய்யப்பட்டார். இன்று விசாரணையின்றிக் கண்ணனூர் சிறையிலிருக்கிறார். தேசபக்தியினால் தூண்டப்பட்டு வீறு கொண்டெழுந்த நம் மாணவர்கள் ஐந்தாம்படைக்கு இரையாகி நாசவேலைகளிலீடுபடாமல் தடுத்ததே சங்கரய்யா செய்த குற்றம்.

சென்ற டிஸம்பர் மாதத்தில் தோழர் குருசாமி மற்றும் சில தோழர்கள்; பிப்ரவரியில் தோழர் செல்லய்யா; இந்த மாதம் தோழர்கள் சர்மா, ஜானகி, ரத்தினம், நாகு உட்பட சுமார் 20 தோழர்கள்—அதிகாரவர்க்கத்தின் கம்யூனிஸ்ட் வேட்டைக்குப் பலியாகி வந்திருக்கின்றனர். பாஸிஸத்தை எதிர்ப்பதாகச் சொல்லும் அதிகாரவர்க்கம் பாஸிஸத்தின் தீராவிரோதிகளான கம்யூனிஸ்டுகளை முதலில் பூட்டிவைக்கிறது. ஜப்பானை எதிர்ப்பதற்கு பதிலாக ஜப்பானுக்கு சாதகமான நிலைமையையே நாட்டில் சிருஷ்டித்துக் கொடுக்கிறது.

கம்யூனிஸ்ட் கட்சியின் மாகாணக் கமிட்டி அங்கத்தினரான தோழர் சர்மாவும் இதரத் தோழர்களும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். இதுதான் வேடிக்கையிலும் வேடிக்கை! பாதுகாப்பை பலப்படுத்துவதற்கும் தேசபக்தர்களை நாசவேலைகளிலிருந்து மீட்பதற்கும் கம்யூனிஸ்டுகள் முயற்சித்து வருவது அதிகார வர்க்கத்திற்குத் தெரியும். ஆயினும் பாதுகாப்பு இந்தியர்கள் கையிலிருக்கவேண்டும், அன்னிய அதிகார வர்க்கம் உதவாது என்று கம்யூனிஸ்டுகள் கூறுவது அதிகாரிகளுக்கு வேப்பங்காயா யிருக்கிறது.

மதுரையில் ஹார்வி மில் போனஸ் கிளர்ச்சிக்காக கம்யூனிஸ்டுகள் அரெஸ்டென்று ஒரு செய்தி கிடைத்திருக்கிறது. இந்தப் பஞ்சகாலத்தில் ஹார்வி மில் தொழிலாளிகளுக்கு போனஸ் முழுவதையும் ரொக்கமாய் அளிக்காமல் உற்பத்தியைப் பெருக்க முடியாது, நாட்டைக் காக்க முடியாது. சேவிங்ஸ் பண்டுக்கு நிர்ப்பந்த வசூல் கூடாதென அரசாங்கமே கூறியிருக்கிறது. ஆயிரக்கணக்கான தொழிலாளிகளின் நியாயமான கோரிக்கையை, நாட்டுப் பாதுகாப்புக்கு அவசியமான கோரிக்கையை ஆதரித்ததுதான் கம்யூனிஸ்டுகளின் குற்றம்.

ஹார்வி மில் தொழிலாளிகளின் குறைகளைப்பற்றிப் பேச்சு மூச்சில்லை; அவர்களை வேலைநிறுத்தத்திற்குத் தூண்டும் ஐந்தாம் படையினரைப் பிடிக்கத் துப்பில்லை; ஆனால் அமைதியுடன் திரளும் தொழிலாளிகளை உருட்டி மிரட்டி ஹார்வி மில் நிர்வாகத்திற்குத் தொண்டாற்ற முன்வந்திருக்கிறது அதிகாரவர்க்கம்.

கடந்த ஆறுமாதகாலமாக மண்ணெண்ணை, விறகு, உணவு தான்யங்கள் சரியாக வினியோகிக்கப்படுவதற்கும், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை ஏற்படுவதற்கும் சலியாது மக்களைத் திரட்டி அதிகார வர்க்கத்தை நெருக்கி வந்திருக்கின்றனர் மதுரைக் கம்யூனிஸ்டுகள். மதுரையில் ஊரடைப்புச் சட்டத்தை நீக்குவதில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டனர். காங்கிரசை நசுக்கிவிட்டோமென்று நிலைமையை உணராமல் வரட்டு ஜம்பம் அடித்துக்கொள்ளும் அதிகாரவர்க்கத்திற்கு கம்யூனிஸ்டுகளின் தேசபக்தியும் காங்கிரஸ் தலைவர்களின் விடுதலைக்காக மக்களை அவர்கள் திரட்டுவதும் எவ்வாறு பொறுக்கும்?

இதுதான் மதுரை அரெஸ்டுகளின் அர்த்தம். தேசப் பாதுகாப்புக்காக, தேசிய சர்க்காருக்காக, மக்களின் தேசபக்தியை வளர்த்துக் கொடுக்கும் கம்யூனிஸ்டுகளைக் கண்டால், அதிகாரவர்க்கத்திற்குப் பிடிக்கவில்லை. பாதுகாப்பின் பேரால் தொழிலாளிகளின் போனசில் நிர்ப்பந்த வசூலை அனுமதித்து, அவர்களைக் குழப்பத்திலாழ்த்தி, கூலிக்கு மாரடிக்கும் யுத்தக் கமிட்டி மெம்பர்களைக் கொண்டு நாட்டைப் பாதுகாக்கப் போவதாகக் கனவு காணும் அதிகாரவர்க்கம் வேறென்ன செய்யும்?

உண்மையான தேசப் பாதுகாப்பென்றால் மக்களின் ஆதரவின்றி நடைபெற முடியாது. தொழிலாளரைத் திரட்டி உற்பத்தியைப் பெருக்கினாலன்றி பாஸிஸ அரக்கர்களை வெல்லுவது கஷ்டம். தொழிலாளர்களின் உரிமைகளைத் தடை செய்யாமல் அவர்களது கோரிக்கைகளை வழங்குவது நாட்டுப் பாதுகாப்புக் கின்றியமையாதது. இதைத்தான் கம்யூனிஸ்டுகள் வற்புறுத்தியுள்ளார்கள்.

இதை உணராமல், இவ்வாறு கம்யூனிஸ்டுகளைச் சிறையிலிடுவதும் தொழிலாளிகளை வேலைநிறுத்தத்திற்குத் தூண்டுவதும் உற்பத்திக்கு முட்டுக்கட்டை போடும் செய்கைகள்; பாஸிஸத்தை ஆதரிக்கும் செய்கைகள். இதை மக்கள் அனுமதிக்க முடியாது. மதுரைத் தோழர்களை அரசாங்கம் உடனே விடுதலை செய்தாகவேண்டும். அவர்கள் விடுதலையாகும் வரை பாதுகாப்பின் பேரால் பலத்த கிளர்ச்சி இடைவிடாமல் நடைபெறவேண்டும்.

# காங்கிரஸ் லீக் ஒன்று சேருமா?

ராமசாமி: வாப்பா வா குப்புசாமி என்ன சமாசாரம்?

குப்புசாமி: எல்லாம் நல்ல சமாசாரம் தான். இன்னைக்கு ஞாயிற்றுக்கிழமை தானே, காலையிலே இங்கு நான் வந்திருந்தப்ப எங்கே போயிருந்தீங்க?

ராம: சைகிள் எடுத்துகிட்டு விறகு வாங்கப் போயிருந்தேன். ஒரு குண்டு விறகு வாங்கிட்டு வருவதற்குள்ளே உயிரே போயிடுச்சப்பா.

குப்பு: இன்னும் எவ்வளவு நாளைக்குங்க இந்த மாதிரி கஷ்டப்படுகிறது?

ராம: தேசிய சர்க்கார் வந்திட்டால் விறகு அரிசி ஒன்றுக்குமே கஷ்டமில்லாமல் சமாளிச்சுடும்.

குப்பு: அது எப்பவரதாமாம்!

ராம: அதற்குத்தான் ஒற்றுமை. ஒற்றுமையாச் சேர்ந்து உணவுப் பிரச்னை, பஞ்சப்படிப் பிரச்னை, தலைவர்கள் விடுதலைப் பிரச்னைக்கெல்லாம் வேலை செய்தோம்னு வந்திடுது.

குப்பு: பகவானே, பகவானே, உங்ககிட்ட ஒற்றுமை, ஒற்றுமை, ஒற்றுமைனு கேட்டு எனக்கு சுத்தமா சலிச்சுப் போச்சு

ராம: நல்ல வேளை, சுதந்திரம், சுதந்திரம்னு நான் பிறந்தாப்பிலே புடிச்சுகேக்கறேன், சுதந்திரம்னாலே சலிச்சுப் போச்சுனு சொல்லாமல் போயிட்டே. அதுவரையிலே சந்தோஷம்—சரி இந்தா காபி கொஞ்சம் சாப்பிடு.

குப்பு: பின்னே என்னங்க காங்கிரஸுக்கும் லீக்குக்கும் ஒற்றுமை ஏற்படும்னு நினைக்கிறீங்க.

ராம: சந்தேகமில்லாமல் ஏற்படத்தான் போகுது: ஏற்பட்டுத்தானே ஆகணும். வேறு வழியில்லையே

குப்பு: நீங்க சொல்லீட்டாக்க ஆயிடுதாக்கும்.

ராம்: இந்த வாரம் பேபர் நீ வாசிச்சயா?

குப்பு: எங்கிங்க நேரம்......அதுதான் ஞாயிற்றுக்கிழமை உங்ககிட்டவரது.

## காந்திஜி முன் வருகிறார்

ராம: பேபரை சரியா வாசிச்சிருந்தேனுக்க, என்னைப் போலவே நீயும் நம்பிக்கையோட பேசுவே. சமாசாரத்தைக் கேளு. காந்திஜி உண்ணாவிரதமிருந்தப்ப பல தலைவர்கள் அவரைப் பார்த்தார்களல்லவா! ஹிந்து பத்திரிகை ஆசிரியரும் அதிலே ஒருத்தர். அவர் பத்திரிகையிலே ஒருதலையங்கத்தில்எழுதினரு 'காந்திஜியை விடுதலை செய்தால், நிலைமை இன்னைக்கு இருக்கிற மாதிரியே இல்லாமல், இதற்கென்னவது செய்வாரு. இது வரையிலும் நடந்த தெல்லாவற்றையும் கூட சரிதானனு மறுபடியும் யோசிச்சுப்பாப் பாருன்னு ஹிந்து ஆசிரியர் அவருக்குத் தெரியாமே அப்படி எழுதுவாரா?

குப்பு: யார்கண்டா?

ராம: டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகை தெரியுமா? அங்கே தான் பாம்போட்டு எரிஞ்சுபோகலே. அந்த வெள்ளைக்கார பத்திரிகையிலே 'கேண்டிடஸ்' என்றுபேர் வைத்துக்கொண்டு ஒருவர் எழுதிட்டு வராரு. அவரும் அதேமாதிரிதான் எழுதியிருக்கிறாரு. இதிலிருந்து காந்திஜிக்கு இன்னைக்கு இருக்கிற நிலைமை நீடிக்க கூடாதுனு இருக்கிறது, அதுமட்டும் நிச்சியமாகத் தெரியுது.

குப்பு: ஆமாம், ஆமாம், காந்திஜி கடிதத்திலேயே அது நல்லாத் தெரியுது.

ராம: ஆனால் லீக்கோடு சேரரத்திற்குத்தான் என்னாச்சுனுபார்க்கணும். காந்திஜி முந்தியெல்லாம் இவ்வொற்றுமை முடியாது, வெள்ளைக்காரன் போனாத்தான் முடியும்னு அல்லவா சொல்லிவிட்டு இருந்தார். ராஜாஜி காந்திஜிகூட பேசிட்டு வந்தாரல்ல. அப்ப காங்கிரஸ்-லீக் சமாசாரத்தையும்பேசி இருக்கிறாரு. ஓரியண்ட் பத்திரிகைக்காரருக்கு இதை சொல்லியிருக்கிறார். அதிலிருந்து ஓரியண்ட் பத்திரிகையிலே எழுதராங்க, ஜின்னா மட்டும் கொஞ்சம் மனசுவச்சால் காங்கிரஸ்-லீக் ஒற்றுமை வந்திடும். ராஜாஜி போலுள்ளவர்கள் காந்திஜியைக் கண்டபிறகு இதுதான் நினைக்கிறாங்க.

## ஜின்னா முன் வருவாரா?

குப்பு: அதென்னமோ வாஸ்தவந்தான். இப்பஇப்ப காந்திஜிகூட இணங்குவார் போலத்தானிருக்குது. ஆனால் ஜின்னா ஒன்றும் வழிக்கே வரமாட்டார் போலிருக்கே.

ராம: நீ அப்படியும் ஒருபட்சமாக அடிச்சுடக்கூடாது. முஸ்லிம் லீக் தினசரிப்பத்திரிகை 'டான்' ஒன்றிருக்குது. அதிலே எழுதியிருக்கு இன்றைக்கு நாட்டிலே இருக்கிற நிலைமை எங்களுக்கும் கொஞ்சங்கூட பிடிக்கல்லை. சுதந்திரம் வேணும்னு எங்களைச்சேர்த்துக்கவேணும்னு ஏன் ஹிந்து தலைவர்களுக்குத் தெரியமாட்டேனென்கிறது. எங்களுக்கு இஷ்டம் போல் நாங்கள் அதிகமாயிருக்கிற பிரதேசங்களில் சுயநிர்ணய உரிமை உண்டு என்று சொல்லீட்டாக்க நாங்களும் அவர்களோட சேர்ந்து தேசத்துக்கு விமோசனம் தேடலாமே. தலைவர்கள் மஹாநாடு கூடும் போதும் அதுதான் லீக் பத்திரிகை எழுதிச்சு. முஸ்லிம்களை சேர்த்துக் கொண்டுதான் ஏதொன்னும் செய்யனும் பலன் கிடைக்கணும்னு. அதற்கு மகாத்மா மனசு வைக்கணும். 'மன்ஷூர்'னு உர்துவிலே ஒரு பத்திரிகை இருக்கு. 'நாட்டிலேயிருக்கிற மோசமான நிலைமை போயி, தேசிய சர்க்கார் வருணும்னு ஹிந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்தால் போதும். அதுக்கப்புறம் அதிகார வர்க்கம் வாலாட்டமுடியாதே' என்றுதான் சொல்லுது.

குப்பு: இப்படி யெல்லாம் சொல்றவங்க காந்தீஜி விடுதலைக்குமட்டும் ஏன் வாயையே திறக்கல்லே

ராம: உனக்கு அவர்கள் மேலிருக்கிற கோபத்திலே அவர்கள் சொல்றதும் கூட தெரியரதில்லை. லீக் முதலில் என்னசொல்லிற்று.

குப்பு: காங்கிரஸ் தங்களுக்கு அதிகாரம் வேணும்னுதான் இதெல்லாம் செய்யராங்கனு.

ராம: இப்பொழுது என்ன சொல்றாங்க தெரியுமா! காந்திஜி சமரசம் வேணும் என்பதில் வெகு ஆவலாயிருக்கிறார்' என்பதை தெரிஞ்சுகிட்டோம். ஆனால் அதைபற்றித் தெளிவாக ஒரு அறிக்கை விட்டுட்டால் இந்த தகராறு எல்லாம் ஒருவாரியா முடிஞ்சுடும்னு. அதே பத்திரிகையில் பம்பாய் தலைவர்கள் மகாநாடு முடிஞ்சதும், அவர்கள் அறிக்கையை படிச்சுட்டு "காந்திஜியை கவர்மெண்டு விடுதலை செய்வதிலே சந்தோஷம், அவர் சிறையிலிருக்கிறதைப்பற்றி நாங்கள் சந்தோஷப்பட முடியாது, அதனாலே எங்களுக்கு லாபமில்லே" என்று எழுதிச்சு.

குப்பு: நீங்க சொல்லவும் தான் இதெல்லாம் தெரியுது.

## லீகும் சுதந்திரம் கோருகிறது

ராம: அவ்வளவுதானா, லீக் கவர்மெண்டுக்கு என்ன குடுகுடுக்குது தெரியுமா. சர் முகமது யமீன்கான், லீக்குக்காரர். மத்திய அசெம்பிளியிலே சர்க்காரை பிச்சுவாரிட்டாரு, இந்தியாவிற்கு உடனே சுயராஜ்யம் கொடுக்கணும்னு கவர்மெண்டுக்கு டோஸ் விட்டிருக்கிறார். லீக் பைனான்ஸ் பில்லிலே கவர்மெண்டை எதிர்த்து ஓட்டுப்போட்டுது. ஆனால் எல்லாக் கட்சிகளும் சேர்ந்தால்தான் சுதந்திரம் பெற முடியும்னு யமீன்கான் அழுத்தமாச் சொல்றாரு.

குப்பு: லீக்குடைய நிலைமைதான் என்ன?

ராம: அவங்க காங்கிரஸோடு சமரசத்திற்கு ஆவலாயிருக்கிறாங்க. சர்க்காரின் திறமையின்மையை எதிர்க்கிறாங்கள்.

குப்பு: ஆனால் லீக் ஒன்னுமே செய்ய மாட்டேங்குதே.

ராம: அதற்கு இன்னும் சந்தேகம் பூராவும் தீர்ந்திடில்லேனு தெரியுது.

குப்பு: அது லீக்கோடே ஒத்துப்போனாத்தான் கவர்மெண்டை எதிர்க்க பலம் கிடைக்கும்னு அவுகளுக்கே தெரியுதே அடிப்படியிருக்க ஏன் அவநம்பிக்கைப் படுணும்!

## சுயநிர்ணய உரிமை அளிப்போம்

ராம. அப்படிச் சொல்லு. அதுமட்டுமல்ல. காங்கிரஸை ஆதரிக்கும் முஸ்லீம் கட்சிகளெல்லாம்கூட 'சுயநிர்ணய உரிமை" கொடுக்கணும்னு இப்பொழுது சொல்றாங்க. அதாவது இந்தியாவிலே இருக்கின்ற தேசபக்திகொண்ட கட்சிகளெல்லாம் 'சுயநிர்ணய உரிமையை' ஒப்புக்கொண்டுவருது. அதனால் லீக் பயப்பட வேண்டியதேயில்லை, அதோடு முன்னாலே வந்து காந்திஜி விடுதலைக்குக் கிளர்ச்சி பண்ணினா காந்திஜி, காங்கிரஸ்காரர்களுக்கு இருக்கிற சந்தேகங்களும் போயிடும்.

குப்பு: அது நிஜந்தான்.

ராம: அதோடே ஹிந்து மஹா சபை

(7-ம் பக்கம் பார்க்க)

# இந்திய விடுதலை இன்றே-அமெரிக்காவில் கிளர்ச்சி

இதோடு கொடுக்கப்பட்டிருக்கும் மகஜரில் அமெரிக்கப்பொது வாழ்க்கையில் பிரபலமான பலர் கையெழுத்திட்டு ரூஸ்வெல்ட்டுக்கு அனுப்பியுள்ளனர். அவர்கள் பண்டிதர்கள், பத்திரிகாசிரியர்கள், நாவலாசிரியர்கள், கல்வி நிபுணர்கள், கல்லூரித் தலைவர்கள், சர்வகலாசாலைப் பேராசிரியர்வள், நோபள் பிரைஸ் பெற்ற ஆசிரியர்கள், வர்த்தக சங்கத் தலைவர்கள், பிரஜா உரிமைச் சங்கத் தலைவர்கள் முதலியோர் :

இந்தியா அமெரிக்காவின் பிரச்னையா ?

ஆம். ஏனெனில் இந்தியாவின் 40 கோடிமக்கள் நம்முடன்சேர்ந்து ஜப்பானை எதிர்க்கவேண்டும். அவர்கள் ஜப்பானை விரும்பவில்லை. அவர்கள் கேட்பது சுதந்திரம். சுதந்திரத்திற்கு உறுதிகூறினால் சீனா ஜப்பானை எதிர்த்துப் போராடுவது போல், அவர்களும் போர்புரிவார்கள்.

இந்திய மக்களின் சுதந்திரத்திற்கு எப்படி உறுதிகூறுவது !

வார்த்தையில் அல்ல. வாக்குறுதிகளில் அல்ல. முதல் உலக யுத்தத்தில் அவர்கள் வீரத்துடன் சண்டை செய்தார்கள்; வெற்றிவந்ததும் சுதந்திரம் அளிக்கப்படும் என்று நம்பினார்கள். இரண்டுவருடங்கள் காத்திருந்தனர். ஒன்றும் நடக்கவில்லை. பிறகுதான் போராட ஆரம்பித்தார்கள். இன்று நடப்பதும் அதன் ஒரு பாகமே. மறுபடியும் அவர்கள் வாக்குறுதிகளை நம்பமாட்டார்கள்.

## செயல் வேண்டும்

செயல் வேண்டும். வாக்குறுதிகளல்ல. அதுவும் இன்றேவேண்டும். வெள்ளம் வரும் முன்னே அணைபோடவேண்டும். இந்தியாவின் நிலைமை திருப்திகரமாக இல்லை. சுதந்திர இயக்கம் மக்களிடையே அதிதீவிரமாக வளர்கிறது.

ஆசியாவில் நேசநாடுகளின் வெற்றியில், நம் நேசநாடான சீனா அதிக ஆவல் கொண்டிருக்கிறது. அதனால் இந்தியாவின் நிலைமை சீனாவிற்கு பெருங்கலக்கத்தை உண்டாக்குகிறது.

இன்றைய இந்தியநிலைமை இன்றிருப்பதுபோல்இருக்கவேண்டியதில்லை. அதை மாற்றமுடியும். நமது பொதுலட்சியத்திற்காக மாற்றத்தான்வேண்டும். நேசநாடுகளின் வெற்றிக்காக.

எல்லாக் கட்சிகளின் பிரதிநிதிகளும் கொண்ட தேசிய சர்க்கார் அமைப்பதற்கு பேச்சுவார்த்தைகள் நடத்தத்தயாரென்று இந்தியர்கள் பிரகடனம் செய்திருக்கின்றனர். எத்தகைய சர்க்கார் அமைக்க வேண்டும் என்று நாங்கள் சொல்லவில்லை. ஆனால் இந்தியாவில் பல்வேறு தொகுதிகள் இருப்பது, சுதந்திரம் அடைந்து ஒற்றுமைப்பட தடையல்ல, தடையாக இருக்கக்கூடாது என்கிறோம். நம் தேசத்தின் பொதுவான அனுபவம் அது. அதைக்கொண்டே சொல்கிறோம். தற்காலிக சமஷ்டியில் இந்தியாவிலுள்ள எல்லா பிரிவுகளும் சேரத் தயார்.

இந்தியப் பிரச்னையில் மத்யஸ்தத்திற்கு இதுவே சமயம்.

## ஜப்பானை எதிர்த்து

மனமுடைந்து வரும் இந்தியமக்களின் கிளர்ச்சியையும் எதிர்ப்பையும் ஜப்பான் தனக்கு ஆதரவாக மாற்றுவதில் மும்மரமாக முனைந்திருக்கிறது. ஜப்பானை எதிர்த்துப்போர்புரிய மக்களைத் தட்டியெழுப்புவதும், ஒன்று திரட்டுவதும் இந்தியமக்களின் தலைவர்களால் மட்டும் தான் முடியும். அவர்கள் சிறையிலிருக்கின்றனர்.

ஐக்ய தேசங்கள் வேண்டுவன எல்லாம் தானாகவே நடந்துவிடும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருப்பது வீண். திட்டமிட்டு, அதற்கென்று முயற்சி எடுத்துக் கொள்ளாமல் ஒன்றும் நடக்காது.

பர்மாவிற்கும் மலேயாவிற்கும் நேர்ந்ததே இந்தியாவிலும் இன்னும் மோசமான விளைவுகளுடன் நேரக்கூடும். இப்பெரும் ஆபத்து நமக்கு முன்நிற்கிறது.

இந்திய மக்கள் பேச்சு வார்த்தைகள் நடத்தத் தயாரென்பதற்கு, காந்திஜி கைது ஆகுமுன் வைஸ்ராயை பார்க்கத் தன் விருப்பத்தைத் தெரிவித்ததும், சமீப காலத்தில் சிறையிலிருந்து எழுதிய கடிதங்களும் போதிய சான்றுகள். காந்திஜியைப் போலவே மற்ற இந்தியத் தலைவர்களும் பேச்சுவார்த்தை நடத்த தயாராயிருக்கின்றனர். தலைவர்களின் போக்கு வெகு முறையானது. இந்த சந்தர்ப்பத்தை ஐக்ய தேசங்கள் நழுவவிடக்கூடாது. இதைப் பொறுத்ததே நேசதேச நலனும்.

ஆகையால் நாங்கள், தலைவர் ரூஸ்வெல்டையும், சீனத் தலைவர் சியாங்-கே-ஷேக்கையும் இந்தியப் பிரச்னையில் தலையிட்டு, இந்தியாவிற்கு சுதந்திரமளித்து, அத்தேசத்தையும் நேச நாடுகளில் ஒன்றாக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறோம்.

இவ்விண்ணப்பத்தை ஆதரிக்கும் அனைவரும், அமெரிக்க மக்களின் அபிப்பிராயத்தைத் தெரிவிக்க உள்ள எல்லா முறைகளிலும் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

---

நமது 'ஜனசக்தி'யில் பிரசுரிப்பதற்காக பாசிஸ்ட் எதிர்ப்புப் பாடல்கள், சிறு கதைகள், ஓற்றையங்க நாடகங்கள் முதலியன வாசகர்களிடமிருந்து வரவேற்கிறோம். ப-ர்.]

---

திருவண்ணமலை

## 9 மாத சம்பளம் வசூலிக்காதே

திருவண்ணமலை ஹைஸ்கூலில் இதுவரை 8 மாதச்சம்பளம் மட்டும் வசூலித்து வந்தார்கள். இவ்வருஷம் 9 மாதச் சம்பளம் வசூலிப்பதென முடிவுசெய்தார்கள். எல்லாம் உயரும்போது, மாணவர்களின் சம்பளமும் உயரவேண்டாமா?

மாணவர்கள் இதை ஒன்றுபட்டு எதிர்த்தனர். 400 பேர் கையொப்பமிட்டு 9 மாத சம்பளம் வசூலிக்கப்படாது என்று மகஜர் அனுப்பினர். அதிகார வர்க்கத்திற்கு அது உறைக்கவில்லை. வேறு வழியின்றி வேலைநிறுத்தம் செய்தனர் வெற்றியடைந்தது. நூற்றுக்கு நூறாக மாணவர்கள் கட்டுப்பாட்டுடன் தங்கள் எதிர்ப்பை காண்பிக்கவும் முனிஸிபல் அதிகாரிகள் இணங்கிவரவேண்டியதாயிற்று. அதை மறுபடியும் 8 மாதமாக மாற்றுவதென்று கவுன்ஸில் முடிவுசெய்து கவர்மெண்டுக்கு அங்கீகாரத்திற்கு அனுப்பிற்று. இவையெல்லாம் சென்ற டிசம்பரில் நடந்தன.

### 9-வது சம்பளம் ஒத்திவைக்கப்பட்டது

நாளதுவரை சர்க்காரிடம் இருந்து ஒரு பதிலும் கிடைக்கவில்லையாம். 9வது மாதச் சம்பளத்தை மார்ச்சு மாதம் வசூலிக்கத் தொடங்கினர். மாணவர்கள் மறுபடியும் கிளர்ச்சிசெய்தனர். 300 கையெழுத்துக்கள் போட்டு மகஜர் அனுப்பினர். சர்க்காருக்கு மறுபடியும் ஞாபக மூட்டும்படி மாணவர்கள் கேட்டனர். அதை கமிஷனர் அன்றே செய்தார். அதுவன்றி பதில் வரும்வரை 9-வது மாத சம்பளத்தை வாங்கக்கூடாதென்றும் மாணவர்கள்வற்புறுத்தினர். முனிஸிபல் கவுன்ஸில் அவசரக் கூட்டம் கூடிற்று. இதைப்பற்றி விவாதித்து, 9வது சம்பளத்தை ஏப்ரல் மாதம் வரை வசூலிப்பதில்லை யென்று முடிவு செய்தது.

மாணவர்கள் இம்முடிவை ஒப்புக் கொண்டனர். கூடிய சீக்கிரத்தில் கவர்மெண்டிடமிருந்து கவுன்சிலின் தீர்மானத்திற்கு அங்கீகாரம் வரும் என்று எதிர்பார்க்கின்றனர். மாணவர்களை பொதுமக்கள் ஆதரிக்கின்றனர்.

---

கோவை

## விடுதலையானவர்களுக்கு வேலை

கோவை பங்கஜா மில்லில் 7 மாதங்களுக்கு முன் போனஸ் பெறுவதற்காக ஒரு வேலைநிறுத்தம் நடந்தது. துப்பாக்கிப் பிரயோகம் கையாளப்பட்டது. இது போதாதென்று 47 தொழிலாளிகளின் மேல் வழக்குத் தொடரப்பட்டது. இவர்களில் அநேகர் பெண்கள். 6 மாதத்திலிருந்து 2 வருடம் வரை தண்டனை பெற்றனர் தோழர்கள். ஜில்லாக் கோர்ட்டு அப்பீல் தீர்ப்பில் 37 பேர் விடுதலைபெற்றனர். பாக்கிப் பத்துப் பேரின் 1½ வருட தண்டனை 1 வருடமாகக் குறைக்கப்பட்டது. இந்தப் பத்துப் பேரின் சார்பாக ஹைக்கோர்ட்டிற்கு அப்பீல் செய்து கொள்ளப்படும்.

விடுதலையான தோழர்கள் உடனே வேலைக்கெடுத்துக் கொள்ளப்பட வேண்டும். அடக்குமுறையைக் கையாண்டு மாதக் கணக்காய் அவர்களைப் பூட்டி வைத்தாய் விட்டது. நிரபராதிகளாய் வெளிவந்துள்ளனர் அவர்கள். அவர்களுக்கு நஷ்டஈடு அளிப்பதும் உடனே வேலைக்கெடுத்துக் கொள்ளுவதும் பங்கஜா மில் நிர்வாகத்தின் கடமை. இதை நிறைவேற்றி வைப்பது தொழிலாளர்களின் ஒன்றுபட்ட கிளர்ச்சியைப் பொறுத்திருக்கிறது.

---

## பாஸிஸப் பேய்

(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்—என்ற மெட்டு)

பாஸிஸப் பேய்களெல்லாம்—உலகினைப் பாழ்படுத்துவதைப் பார்
ரோஷமுட னெதிர்த்தே—செஞ்சேனை நொறுக்கித்தள்வதைக் கேள்
நாஜிசமாம் புலிப்பேய்—சண்டாள ரத்தவெறிகொண்ட பேய்
ஆசை மலைப்பாம்பாய்—யூரோப்பை 'அபக்'கென விழுங்கும்
ஜப்பானென்ற குள்ளப் பேய்—கிழ்த்திசையில் துப்போடு வேட்டையாடும்
அப்போது சீனத்திலே—நாசவேலை இப்போது எவ்விடத்தும்
பிரங்கிக் கோட்டையிலே—இப்பேய்கள் போரங்கி பூண்டிருந்தே
பாரெங்கும் தங்கொடுங்கோல்—பரவிடப் படையெறிந்துழும்
கொள்ளைக்காரச் சைத்தான்;—பயங்கரக் கொம்பேறிமூக்கனொடு
கள்ளக் கரும்பூதம்—ஒன்றான காட்சியே பாஸிஸப்பேய்
ஆகாயத்தின் மேலே—சென்றிரைந்து அலறிடுமொரு பேய்
வேகமாய்க் குண்டெறிந்தே—அழிவுகள் விளைத்திடுமொரு பேய்
செங்குருதிக் கடலில்—வீரர்தமை மூங்கவைக்கும் ஒரு பேய்
எங்கும் பொதுமக்களை—பலிக்கடாவென்றே கொல்லுமொரு பேய்
நச்சுப்புகை வீசி—மூச்சடைக்க நாசஞ்செய்யுமொரு பேய்
பச்சைக் குழந்தைகளை—பெண்களைப் பங்கஞ்செய்யுமொரு பேய்
ஆசியனுமொரு பேய்—சுத்தரத்த ஆரியனுமொரு பேய்
தேசிய சோஷலிஸம்—உலகுய்யச் செப்பும் ஞானி ஒரு பேய்
சோவியத் பூமிதனில்—செஞ்சேனை சூழ்ந்திடும் பொன்னுலகில்
தாவிக்குதித்தது பார்—நாஜிப்பேய் சாவை அழைத்தது பார்
வெற்றிவெறி யொழிய—நாஜிசத்தின் வீம்பு முற்றும் தொலைய
குற்றுயிரும் குலைய—செஞ்சேனை குமுறிச் சாடுது பார்
குள்ளப்பேய் சீனத்திலே—ஐந்தாண்டு கும்மாளம் போட்ட பின்னும்
வெல்ல முடியவில்லை—ஐக்ய அணி வெல்லுது சீனத்திலே
சீனமும் சோவியத்தும்—உலகுக்குச் சீரிய நம்பிக்கையாய்
ஆனதின்றுதலினால்—பாஸிஸப் பேய் அழிவு திண்ணம் திண்ணம்
மாஜனமா பெரும்போர்—பார்முழுதும் வளரும் பான்மை கண்டால்
பாஸிஸம் சாய்வதன்றி—புதுப்புவி பாங்காயெழும் உறுதி
செஞ்சேனை வெல்க வெல்க !—வணங்காத சீனத்தின் வீரம் வெல்க !
இந்திய-சீன ஐக்யம்—உலகுய்ய என்றும் நீடுழி வாழ்க ! (பாஸிஸ)

—ப. ஜீவானந்தன்

---

# 7 லக்ஷம் ரெயில்வேத் தொழிலாளிகளுக்கு உணவு எங்கே ?

ரெயில்வே வருமானம் அதிகரித்துள்ளது என்று மத்திய அசெம்ப்ளியில்கூறப்பட்டது. ஆனால் ரெயில்வேத்தொழிலாளிகளுக்குப் பஞ்சப்படி கொடுப்பதற்கு மூக்கால் அழுகிறது ரெயில்வே போர்டு குறைந்த பஞ்சப்படி கொடுப்பதோடு இஷ்டப்பட்டவாறெல்லாம் ஸ்தல வித்திபாசம்முதலியவை கையாளப்படுகின்றன. இதையெல்லாம் அகற்றித் தகுந்த பஞ்சப்படி மாதம் ரூ. 30 வேண்டுமென வற்புறுத்துவதற்காக இம்மாதம் டில்லியில் 10-ந் தேதி ரெயில்வேத் தொழிலாளிகள் பெடரேஷன் கூட்டம் கூடுவதாயிருந்தது. அநேக ரெயில்வே சங்கப் பிரதிநிதிகளும் டில்லிக்குச் சென்றனர். ஆனால் அகில இந்திய ரெயில்வே தொழிலாளர் சங்கத் தலைவர் ஜம்னுதாஸ் மேத்தா கூட்டத்தை திடீரென்று ஒத்திப்போட்டார். இரண்டு தினங்களுக் கெல்லாம் சர்க்கார் அறிக்கையொன்று வெளி வந்தது. அதிக பஞ்சப்படி விகிதம் விளம்பரப்படுத்தப்பட்டது. ரூ. 8லிருந்து ரூ, 16 வரை பஞ்சப்படி உயர்வு அறிவிக்கப்பட்டது. மிலிடெரி யூனிட்டுகளில் வேலை செய்பவர்களுக்கு இது கிடையாது. ஜம்னுதாஸ் மேத்தா இந்த ஏற்பாட்டை ஆதரிப்பதாகவும் அறிக்கையிலிருந்து தெரிய வந்தது ரெயில்வேத் தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கைகளை ரெயில்வே நிர்வாகம் நிராகரித்தது.

## பஞ்சப்படி உயர்வு பெறுவோம்

மேத்தாவின் நம்பிக்கைத் துரோகமும் சர்க்காரின் அறிக்கையும் ரெயில்வேத் தொழிலாளிகளிடம் அசாத்திய பரபரப்பை உண்டாக்கியிருக்கின்றன. கேந்திரஸ்தானத்திலிருக்கும் ரெயில்வேத் தொழிலாளிகளின் வாழ்க்கையே விலைவாசி உயர்வினால் திண்டாட்டத்திலிருக்கும் போது பஞ்சப்படியில் பேரம் பேசும் ரெயில்வே நிர்வாகங்களின் போக்கை ரெயில்வேத் தொழிலாளிகள் ஒப்புக் கொள்ளப் போவதில்லை.

அடுத்த அகில இந்திய ரெயில்வேத் தொழிலாளிகள் பெடரேஷன் மீட்டிங்கில் தொழிலாளிகளின் பஞ்சப் படிக் கோரிக்கைக்கு ஆதரவு திரளுவதும் மேத்தா போன்ற சுயநலக் கும்பல்கள் நிராகரிக்கப்படுவதும் நிச்சயம். 7 லக்ஷம் தொழிலாளிகளின் திரண்ட சக்திக்குமுன் எத்தகைய பிற்போக்குக் கோஷ்டியும் பணிந்தாகவேண்டும்.

தென்னிந்திய ரயில்வேத் தொழிற்சங்கக் காரியதரிசி தோழர் நம்பியாரும், எம். எஸ். எம். ரெயில்வேத் தொழிற்சங்கக் காரியதரிசி தோழர் நரசிம்ஹமும் மேத்தாவின் போக்கையும் அரசாங்க அறிக்கையையும் கண்டித்து தொழிலாளிகள் ஒன்றுபட்டுக் கோரிக்கையைப் பெற வேண்டிய அவசியத்தைக் குறித்து ஒரு அறிக்கை விட்டுள்ளனர். 17-3-43-ல் பொன்மலையில் இதுசம்பந்தமாய், ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் எம். கல்யாணசுந்தரம் தலைமை வகித்தார். சங்கத் தலைவர் தோழர் புருஷோத்தமன் டில்லி சென்றுவந்த விவரங்களை விளக்கினார். கீழ்க்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது :—

### பொன்மலையில் தீர்மானம்

மத்திய அரசாங்கத்தால் பிரசுரிக்கப்பட்டிருக்கும் பஞ்சப்படி திட்டம் தொழிலாளர்களை திகைக்கவைக்கிறது. இந்த நெருக்கடியான சமயத்தில் ரயில்வேத் தொழிலாளர்களிடையே அதிருப்தியையும், பரபரப்பையும் உண்டுபண்ணுகிறது. பாசிஸ்ட் எதிர்ப்பிற்கும், நாட்டுப் பாதுகாப்பிற்கும் ரயில்வே தொழிலாளர்களை உற்சாகப்படுத்த வேண்டிய சமயத்தில், சர்க்கார் கடைப்பிடிக்கும் சண்டித்தனமான கொள்கை தேசப் பாதுகாப்பிற்கு ஆபத்து ஏற்படுத்துமென்று அஞ்சுகிறோம். விலைவாசி உயர்விற்குத் தகுந்தாற்போல் குறைந்தபட்சம் ரூ. 30 பஞ்சப்படி கொடுக்கவேண்டும். இந்த பிரச்சினையை உடனே புனராலோசனை செய்யவேண்டுமென ரயில்வே போர்டை இக்கூட்டம் வற்புறுத்துகிறது.

மேலும், பெடரேஷன் தலைவர் ஸ்ரீ ஜம்னுதாஸ் மேத்தா, புதிய திட்டத்தை ஒத்துக் கொண்டதாக சர்க்கார் அறிவிப்பது உண்மையானால், அவருடைய செய்கையை வன்மையாகக் கண்டிப்பதுடன், பெடரேஷனின் விசேஷக் கூட்டத்தை கூடிய சீக்கிரத்தில் பம்பாயில் கூட்டவேண்டுமென்று பெடரேஷன் பொதுக்காரியதரிசியை இக்கூட்டம் கேட்டுக்கொள்ளுகிறது.

---

சென்னை

# செந்தொண்டரின் டைரி

சென்னையில் விறகுப் பஞ்சத்தோடு சேர்ந்து அரிசி பஞ்சம் மக்களை வாட்டி வதைக்கிறது. சர்க்கார் அரிசிக்கென்று மலிவான டிபோக்கள் ஆங்காங்கு அமைத்திருக்கின்றனர். சென்னையில் 7 லட்சம் மக்கள் வசிக்கின்றனர்; இவ்வளவு பெரிய நகரத்திற்கு சர்க்கார் திறந்துவைத்திருக்கும் அரிசி டிப்போக்கள் 10, கடலில் கரைத்த காயம்போல். டிப்போக்களுக்கு முன் தவருமல் சர்வசாதாரணமாக 3000 பேர் எப்பொழுதும் கூடியிருப்பார்கள். நிற்பதற்கு நிழல்கூட இல்லை. பேருக்கு ஒரு பந்தல் போட்டிருக்கிருர்கள். ஆயிரக்கணக்காக வந்து கூடும் இம்மக்களுக்கு அது போதாது. பெண்கள் எல்லாம் பந்தலுக்கு வெளியிலே கால்கடுக்க நின்று காத்திருக்கின்றனர். சென்னையில் வெய்யிலோ சொல்லவேண்டாம். மாலை 1 மணியிலிருந்து 6 மணிவரை அந்த வெய்யிலெல்லாம் அவர்கள் தலையில்தான். இந்தக் கூட்டத்தில் சிவிக் கார்டுகளும் போலீஸும் உதவ வந்துவிடுகிருர்கள். கேவலமான பாஷையில் பெண்களென்றும் பாராமல் வைவது. பிடித்துத் தள்ளுவது. தடிகளை பிரயோகிப்பதுமாக அமக்களம் எல்லாம் செய்து வருகிருர்கள். டிப்போக்காரர்களோ அதற்குமேல் காட்டுமிராண்டி ராஜ்யம் நடத்தப் பார்க்கிருர்கள். இதெல்லாம் காண ஜனங்களுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது.

## 'க்யூ' பழக்கம் வேண்டும்

இதெல்லாம் போதாதென்று கூட்டத்தில் இடி, உந்துதல், நெருக்கம், குழப்பம். குழந்தைகள் மிதியுண்டு போகின்றனர்; தினசரி 5, 6 பெண்களுக்கு மயக்கம் போடுகிறது. 'க்யூ' பழக்கம் இங்கு இருந்ததில்லை, அவர்களுக்கு 'க்யூ' பழக்கத்தை கொண்டுவர முயற்சிக்கும் நம் தோழர்களை சில டிப்போக்காரர்கள் 'கழுத்தைப் பிடித்து கல்தா'க் கொடுக்கிருர்கள், போலீஸ்காரர்கள் விரட்டுகிருர்கள், சிவிக் கார்டுகள் சீறுகிருர்கள். இவ்வளவு கஷ்டத்தையும் சகித்துக்கொண்டு, மக்களும் சரி, நம் தோழர்களும் சரி, விநியோகத்தை ஒழுங்குபடுத்தினலும் கூட தினசரி 700 பேர்வரை வெறுங் கையுடன் வீடு திரும்பவேண்டியதாகிறது. சாயந்திரம் 5-30 மணிக்கே டிப்போக்காரர் டிப்போவை இழுத்து மூடிவிடுகிருர்.

நிலைமையைப் பார்த்தால் பயங்கரமாகத்தானிருக்கிறது. சர்க்கார் மீது பழியைப் போட்டுவிட்டு சும்மாயிருந்தால், நம் மக்கள்தான் மடிகிருர்கள். மக்களுக்கு சேவை செய்யும் நாம்தான் அதற்கு நிவாரணம் தேடவேண்டும். அது சாத்யம் என்று பல இடங்களில் நாம் அனுபவத்திலிருந்து அறிகிறோம்.

## டைரி

நம்மாள்வார் பேட்டையில் நம் தோழர்கள், அங்குள்ள ஒரே அரிசி டிப்போவிற்குச் சென்றனர். போனதெல்லாம் நான்கு பேர்கள்.

8-3-43: இன்று 'க்யூ' அமைக்க முடியவில்லை, சிவிக் கார்டுகள் இங்கு அட்டகாசம் செய்தார்கள்.

9-3-43: 'க்யூ' ஏற்படுத்த முடியாவிட்டாலும், பல வரிசைகளில் உட்கார வைத்து குழப்பத்தைக் குறைத்தோம். 1 மணி நேரத்திற்கு இப்படி நடந்தது. இதுவரை சும்மாயிருந்த சிவிக் கார்டுகள் கிளம்பிவிட்டனர். யாரோ சில பெண்கள் அவர்களுடைய உத்திரவை கேட்கவில்லையென்று ஒழுங்காக உட்காரந்திருந்தவர்களையும் 'நட வெளியிலே' என்று தள்ள ஆரம்பித்தார்கள். 100 பேர்வரை அரிசியில்லாமல் போகவேண்டியதாயிற்று.

10-3-43: இன்று சிவிக் கார்டுகளே 'க்யூ' அமைக்கத் தொடங்கினர்கள் ஆண்களைமட்டும். அதுவும் அதட்டி, உருட்டி, பிடித்து இழுத்து, உந்தி தள்ளி ஒருவாறு 'க்யூ' ஆக்கினர்கள். பெண்களைப் பொருத்தவரையில் நம் தோழர்களுக்கு ஒப்படைத்து விட்டார்கள். நம் தோழரிடம் காட்டும் தோரணையும் மாறி பேசும் வார்த்தைகளும் கௌரவமாகவும் இருந்தது. ஒத்துழைப்பதாகவும் கூறினர்கள். 'க்யூ' அமைக்கப்பட்டது. இருந்தபோதிலும் 300 பேர்வரை அரிசி கிடைக்காமல் போகவேண்டி வந்தது. கூட்டம் தினசரி அதிகரிக்கிறது. அரிசி அளந்து கொடுப்பது ஒரு ஆள். அதுவும் 5-30 மணி எப்பொழுது அடிக்கும் என்று காத்துக்கொண்டிருக்கிருன்.

12-3-43: இன்று 2000 பெண்கள் வந்திருந்தனர். பந்தலில் இடமில்லை. வெய்யிலில் காய்ந்தனர் மாலை 1 மணியிலிருந்து 6 மணிவரை. ஒரு பெண்ணுக்கு மயக்கம் போட்டுவிட்டது. 500 பேர் கடைசியில் சும்மா போனர்கள்.

## அரிசிப் பஞ்சத்தில் அனுபவங்கள்

### பொதுஜனங்களிலிருந்து தொண்டர்கள்

14-3-43: வீடுவீடாக உணவுக்கமிட்டி, தொண்டர்படைக்கு பிரசாரம் செய்தோம். 8 பேர் தொண்டர் படையில் சேர்ந்தனர். 2 பேர் உணவுக்கமிட்டியிலிருக்க சம்மதித்தனர்.

15-3-43: பெண்கள் மட்டும் 3000. 2 பேருக்கு மயக்கம் போட்டது. 600 பேருக்கு அரிசி கிடைக்கவில்லை.

16-3-43: ஒழுங்காக விநியோகம் நடக்கவும் டிபோக்காரருக்கு ஓரவஞ்சனைக்கு இடமில்லாது போயிற்று. தனக்கு வேண்டுமென்ருல் அவர்களுக்கு முதலில் கொடுப்பது. 'க்யூ' முறைக்கு முரணுக பின்னல் வந்தவர்களுக்குக் கொடுக்க ஆரம்பித்தார். வந்தவர்கள் 'க்யூ'வில் தங்களிடத்தில் வந்து நிற்கும் பழக்கம் வரவே இந்த ஓரவஞ்சகத்தை கண்டித்தனர், டிபோக்காரருக்கு அடங்கா கோபம் வந்துவிட்டது. நம் தொண்டர்களில் ஒருவரை டிப்போவிற்கு வெளியில் தள்ளிவிட்டார்.

நம்மாள்வார் பேட்டை ஓட்டேரி டிவிஷனிலிருக்கிறது. இங்கு தற்காலிக உணவுக் கமிட்டி ஏற்படுத்தினேம். கலெக்டரைக் கண்டு கீழ்கண்ட கோரிக்கைகளை சமர்ப்பிப்பதென முடிவுசெய்தோம்.

### கோரிக்கைகளுடன் திரட்டினேம்

1. நம்மாள்வார் பேட்டையிலிருக்கும் டிபோக்காரரின் நடத்தையை கலெக்டர் கண்டிக்கவேண்டும்.
2. பந்தல் பெரிதாக்கப்படவேண்டும். தெருவில் போக்குவரத்திற்கு கூட்டம் தடையாக இல்லாமலிருக்க மூங்கில்வேலி கட்டவேண்டும். அரிசி கொடுப்பதற்கு நான்கு ஆட்களும், 2 காஷியர்களும் வேண்டும்.
3. நம்மாள்வார் பேட்டைக்கு இன்னுமொருடிப்போ வேண்டும்
4. அக்கம் பக்கத்தில் கொசப்பேட்டை பெரம்பூர் முதலிய இடங்களிருந்தெல்லாம் அரிசிக்கு இங்கு வருகின்றனர். அவர்களுக்கு கஷ்டமில்லாமல் அவ்விடங்களிலெல்லாம் டிபோக்கள் திறக்கப்படவேண்டும்.
5. டிபோவிற்கு எல்லைபிரித்து, வீட்டு வீட்டிற்கு 'அறிமுகக் கார்டுகள்' வழங்கவேண்டும்.
6. முனிசிபல் ஊழியர்கள், தினசரிக் கூலிக்காரர்கள் 5-30 மணிக்குத்தான் வீட்டிற்கு வரமுடிகிறது. ஆகவே. டிபோக்கள் இரவு 8 மணி வரை திறந்திருக்கவேண்டும்.

18-3-43 கலெக்டரிடம் தூதுகோஷ்டி சென்றது. அந்த டிபோக்காரரை எடுத்துவிடுகிறேன் என்று சம்மதித்தார். வேலி பந்தல் இரண்டும் போட உத்திரவுகொடுக்க ஒப்புக்கொண்டார். இரவு 7 மணி வரை டிபோவை திறந்துவைத்திருக்க ஏற்பாடு செய்வதாகச் சொன்னர். ஆனல் வீட்டுக்கு வீடு கார்டுகள் கொடுக்க மட்டும் சம்மதிக்கவில்லை. அதற்கு அவர் கூறும் காரணம் 'அரிசி ஸ்டாக்கில்லை. தஞ்சாவூரில் விளையும் அரிசி மக்களுக்கு போதாமல் போயிற்று! போக்குவரத்தில் சீர்கேடு. கள்ளமார்க்கெட்டுகளை ஒழிக்க சர்க்காருக்குத் திட்டமான கொள்கையும் திறமையும் இல்லை. இது அதையே எடுத்துக் காண்பிக்கிறது. நம்மாள்வார் பெட்டையில் ஜனங்கள் உணவுக்கமிட்டியைப் பலப்படுத்தி அக்[illegible]ரிக்கையையும் பெற முடியும். சில தினங்களில் இங்குகிடைத்த வெற்றியே தோல்விமனப் பான்மைக்காரர்களுக்கு ஆணித்தரமானபதில்.

### டிப்போவில் நுழையாதே!

ராயபுரம் ராபின்ஸ்ன் பார்க் டிபோ. 16-3-43 நானும், இன்னும் 7 பெண் தொண்டர்களும் இந்த டிப்போவிற்குச் சென்ரேம். 'டிப்போவிற்குள் நுழையாதே' என்று சொல்லிவிட்டார் டிபோக்காரர். அவருடன் சேர்ந்துகொண்டனர் சிவிக்கார்டுகள். 'கலெக்டரிடம்' அனுமதி பெற்றுவந்தால் விடுவீர்களா!' என்று கேட்டதற்கு 'கலெக்டர் சொன்னலும் நான் விடமாட்டேன்' என்று அதிகார தோரணையில் கூறிவிட்டார்.

17-3-43 காலை 8 மணி. 4 பெண்தொண்டர்கள். 3 ஆண்தொண்டர்கள். 5 சிவிக் கார்டுகள். உடையுடன் ஒரு கான்ஸ்டபிள். 4 பேர் மப்டியில். ஒரு சப் இன்ஸ்பெக்டர். தொண்டர்களுக்கு உள்ளேபோக அநுமதியில்லை. டிபோவுக்கு, வெளியில்கூடியிருந்தவர்களை 'க்யூ'வாக அமைத்தோம். உள்ளிருந்தவர்கள் அரிசிவாங்கிச் சென்றதும், வெளியிலிருந்துகொண்டே இவர்களை ஒழுங்காக உள்ளே அனுப்பினேம் வெளியிலிருந்து உள்ளேயும் ஒழுங்காகப் போய்வரும்படி கேட்டுக்கொண்டோம். பாம்புபோல் நீண்ட 'க்யூ' நெளிந்து நெளிந்து நகர்வதைக்கண்டு பெண்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். ஆனல் அதனல் எவ்வளவு சௌகரியம் என்பதை உணர்ந்துகொண்டனர். நம்முடன் ரொம்பவும் ஒத்துழைக்கின்றனர். இதற்குமுன் பட்ட கஷ்டங்களையெல்லாம் சொல்கின்றனர். இப்பொழுது அக்கஷ்டங்கள் இல்லையென்று குதூகல மடைகின்றனர் 2½ மணி நேரத்தில் 1500லிருந்து 2000வரை பெண்கள் அரிசி வாங்கிச் செல்லமுடிந்தது.

### 'ஜனசக்தி' விற்பனையோடு

அங்கு கூடியிருந்த அதிகாரிகளுக்கு ஒரு வேலையுமில்லை. சப் இன்ஸ்பெக்டர் முன்வந்து "நீங்கள் நல்லவேலை செய்திருக்கிறீர்கள். நாங்களும் ஒத்துழைக்கிரேம் என்ருர். போலீஸ்காரர் எங்கள் வேலையைக்கண்டு வெகு சந்தோஷப்பட்டார். ஒரு 'ஜனசக்தி'யும் வாங்கிக்கொண்டார். அந்த டிவிஷனில் உள்ள ஒரு வியாபாரி எங்கள் வேலையை மெச்சி எங்களுடன் எல்லா முறையிலும் ஒத்துழைக்கமுன் வந்தார்.

இங்கு பலகுறைகளிருக்கின்றன:—

1. இங்கு 2½ படியுள்ள அரிசியை 3 படி. 4படி என்று அளந்து போடுகிருர்கள்.
2. அரிசி தினசரி மோசமான அரிசியாகவே கொடுக்கப்படுகிறது.
3. இங்கு சிவிக்கார்டுகளும், டிப்போக்காரரும் வாங்குவோரிடம் முரட்டுத்தனமாக நடந்துகொள்கின்றனர்.
4. அரிசி அளந்து கொடுப்பதற்கு இரண்டுபேர்கள் போதாது.
5. பெண்கள் வெளியே வெய்யிலிலே நிற்கவேண்டியிருக்கிறது.

ராயபுரத்திலும் உணவுக்கமிட்டி அமைத்து உழைத்தால், இக்குறைகளைத் தீர்க்க முடியும். அதற்கு குறிப்பான கோரிக்கைகளுடன் கிளர்ச்சி செய்யவேண்டும்.

### "க்யூ" பரவுகிறது:

நம் தோழர்கள் தற்சமயம் வண்ணரப்பேட்டை, ஓட்டேரி, ராயபுரம், சிந்தாதிரிப்பேட்டை இங்கெல்லாம் 'க்யூ'க்கள் அமைத்து வருகின்றனர். சிந்தாதிரிப்பேட்டையில் தற்காலிக உணவுக் கமிட்டியிருக்கிறது. நான்கு பொதுக் கூட்டங்கள் நடந்தன. 250 பேர் வரை கூட்டங்களுக்கு வருகின்றனர். தொண்டர் படையில் 28 பேர். வண்ணரப்பேட்டையில் உணவுக் கமிட்டி இருக்கிறது. 4 கூட்டங்கள் நடந்தன 15 தொண்டர்கள். அதில் 3 பெண்கள். ஓட்டேரியில் உணவுக் கமிட்டி, 8 தொண்டர்கள் ராயபுரத்தில் உணவுக் கமிட்டி நிறுவ முயற்சித்து வருகின்றனர். பிரபல காங்கிரஸ் வாதி ஒருவர் ஒத்துழைக்க முன்வந்திருக்கிருர்.

சென்னை யெங்கும் மக்களுக்கு உதவ தேசபக்தர்கள் முன்வரவேண்டும். மக்களுக்கு உதவ இதை விட்டால் வேறு வழியில்லை. இதில் வெற்றி நிச்சயம். உணவுப் பிரச்னை எல்லோரையும் பாதிக்கிறது, எல்லோரையும் ஒன்று திரட்டுகிறது, இதில் சர்க்கார் ஒன்றையும் மறுக்கமுடியாது.

1. டிவிஷனுக்கு 1 உணவுக் கமிட்டி.
2. தொண்டர் படை.
3. டிப்போக்களில் 'க்யூ'.

(8-ம் பக்தி தொடர்ச்சி)

கின்றனர். இவர்களிடம் வரும் சிறு வியாபாரிகள் டன் 30 ரூபாய் கொடுத்தாலும் காட்டுவிறகுதான் கிடைக்கிறது. சவுக் மரம் என்ருல் டன்னுக்கு 40 ரூபாய் என்கிருர்கள். இப்படி வாங்கிகுண்டு 1 ரூபாய் வீதம் கொடுத்தால் ஏழைகள் எப்படி வாங்கமுடியும். விறகு இருந்தும், ஏழைகள் ஆயிரக்கணக்கில் சென்னையெங்கும் அடுப்பு மூட்டாமலே பட்டினி கிடக்க வேண்டியிருக்கிறது.

எல்லா டிவிஷன்களிலும் கட்டுப்பாட்டு விலையை ரூ. 20 ஆகவே இருக்கவேண்டும், சர்க்கார் சப்ளையைத் தொடர்ந்து நடத்தவேண்டும், சிறு வியாபாரிகளுக்கு டன் 15 ரூபாய்க்கு கொடுக்கவேண்டும் என்ற கோரிக்கையை பரப்பவேண்டும். பொதுக் கூட்டங்களில் மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும். விடாது கிளர்ச்சி செய்யவேண்டும். மக்களின் ஆதரவு அமோகமாகக் கிடைக்கும். நடைமுறையில் செய்யக்கூடிய குறிப்பான, உருப்படியான இவற்றை சர்க்கார் நிராகரிக்க முடியாது.

அலிபுரம் சிறைக்குள்

# தேசபக்த[ர்]களி[ன்]...
# ஐந்தாம்படை[க்]கு ஆ...

கம்யூனிஸ்டுத் தோழர்கள் கைதியானல்
காயம்பட்ட சிப்பாய்களைப் போல் சும்ம
யிருப்பதில்லை. காயம்பட்ட சிப்பாய்க
ஆஸ்பத்திரியில் அவகாசமெடுத்துக்கொ
வார்கள். சிகிச்சை பெறுவார்கள். அ
சமயத்தில் போர் முனையில் போர் புரியு
வேலையைச் செய்ய முடியாது. கம்யூ
னிஸ்ட்டுகளுக்கு எங்கிருந்தாலும் வே
செய்யும் முனைதான். வேலைக்கிடமிருக்
றது. வேலை செய்து வருகிருர்கள்.

அலிபுரம் சிறையில் அரசியல் கைதிக
எண்ணிக்கை 1500. பாதிக்கு மே
அரசியலில் சிரத்தை செலுத்துவதில்லை
16 பேர்கள் தான் கம்யூனிஸ்டுகள்
150 பேர்வரை காந்தியவாதிகள் 200பே
கள் நம் கொள்கையை ஆதரிப்பதுமில்லை
எதிர்ப்பதுமில்லை. பார்வேர்ட் பிளாக
காங்கிரஸ் சோஷியலிஸ்டுகள், ட்ராட்ஸ்
கூட்டத்தினர் எல்லாம் சேர்ந்து 12 பே

## முதலில் வெறுப்பு

பார்வார்ட் பிளாக்குக்காரர்களும், காங்
கிரஸ் சோஷியலிஸ்ட்டுகளும், ட்ராட்ஸ்கி
கூட்டத்தினரும் நம் தோழர்களை சி.ஐ.டி
கள் என்று பிரசாரம் செய்தன[ர்]. சர்க்
கார் சிறைக்குள் நடப்பதைத் தெரிந்து
கொள்வதற்கு இவர்கள் சிலரை அனுப்பி
யிருக்கிருர்கள் என்று மற்றவர்களிடம்
'குசுகுசு'ப்பிரசாரத்தைதுரிதப்படுத்தினர்
இதனல் மற்றவர்கள் எல்லோருமே ஆரம்
பத்தில் நம் தோழர்களை தீண்டாதவர்க
ளைபோல்நடத்தினர்கள். நம் தோழர்களும்
'எல்லோரையும்' ஐந்தாம்படை யென்று
நினைக்கும் பெருந் தவறைச் செய்தார்கள்
ஆனல் சீக்கிரம் அத்தவறை உணர்ந்து
எல்லோருடனும் பழக ஆரம்பித்தார்கள்
பார்வார்ட் பிளாக்கிர்கள், கா. சோஷலிஸ்
டுகள், ட்ராட்ஸ்கிய கும்பல் விடுதலை
பெற்ற தோழர்களை, நாசவேலைகள் செய்
யும்படி வற்புறுத்தினர். ஆனல், தேச
பக்தர்கள் அவற்றிற்கு செவிசாய்ப்பதா
யில்லை.

காந்திய வாதிகளுக்கு மக்கள் சக்தியில்
பரிபூர்ண நம்பிக்கை யில்லை. தோல்வி
மனப்பான்மையினல் பிரிட்டிஷார் இந்தி
யாவை விட்டுச்சென்ற பிறகுதான் ஒற்று
மை சாத்தியம் என்கிருர்கள். அஹிம்சை
யில் அபார நம்பிக்கை இருப்பதினல் நாச
வேலையை எதிர்க்கின்றனர். "போராட்
டத்தின்" தோல்விக்குக் காரணத்தை
உணருவதற்கு முடியாததினல் கம்யூ
னிஸ்டுகள் தேசீயப் போராட்டத்திற்குத்
துரோகம் செய்ததாகக் கூறுகின்றனர்.
மலையாளத்திலிருந்து வந்திருக்கும் காந்திய
வாதிகள் கம்யூனிஸ்டுகளுக்கு சர்வ தேசப்
பைத்தியம் பிடித்திருக்கிறது என்று சொ
ல்கிருர்கள். அதனல் அவர்களைப் பின்
பற்றுபவரிடம் தேசீய பிரசாரம், செய்து
தேசீய ஸ்தாபனங்கள் அமைக்கவேண்டும்
என்பது அவர்களது நூதனத்திட்டம். அப்
பொழுது கம்யூனிஸ்ட்டுகள் ஆ[illegible] இழ
ந்து விடுவார்களாம்! ஆனல் க[ம்யூ]னிஸ்டு
களின் தேசபக்தி மிகுந்த கொ[ள்கை]க்கு
ஆதரவு வலுத்து வருகிறது.

சிறையில் சில்லரைத் தகராறுகள் வரு
வது சகஜம். அதிலும் எண்ணிக்கை அதி
கரிக்க அதிகரிக்க அதுவும் அதிகரிக்கும்
சாப்பிடும்போது சச்சரவுகள் சர்வசாதார

ணம். இன்...
மை வெகு...
கொண்டு அ...
வார்கள்.

## சேவைக்கு...

இந்தக் ...
தோழர்களி...
தொண்டர்க...
தினர்கள்.
வைத்துக்கொ...
சரவுகளை நி...
கிளம்பிய சி...
தீர்த்து வைத்...
அனைவருக்கு...
தது. அதற்...
தலையெடுத்த...

60 பேர் ...
விவாதித்து ...
கொண்டு வ...
ன்ற பிரச்னை...
சொல்வதை...
அதைப்பற்றி...
தினத்தன்று...
ல்கூடினர்...
துச் சொன்...
னர். சுதந்திர...
க்குக்காரர்க...
பிரதிக்ஞை...
மென்று செ...
ஒப்புக்கொ...
கள் தெரிந்...
வரை ப...
கொண்டன...
நன்கு விள...

காந்திஜீய...
எல்லாத் தே...
உண்ணவிர...
ளும் பங்கெ...

கல்கத்தா...
காலத்தில், ...
பட்டனர்.
கள் சிலர். ...
வந்துவிட்ட...
மற்றவர்க...
நெருக்கடி ...
கள். அத...
விடும் என்...

## எதிர்ப்பு ...

இரண்டு...
களுக்கு இ...
டே வந்தத...
யென்றே ...
ஜை"பற்றி...
கள். நம் ...
கொள்ள ...
வருகின்ற...
வது கௌ...

நம்தோ...
மூன்று ம...
வன்றி ந...
இருக்கின்...
யான கெ...
நமக்குக் ...
ஜிதமாகிற...

ஓரத்த நாடு

# மாணவர் சங்[கத்]தை...

ஓரத்தநாட்டில் ஒரு ஹைஸ்கூல். இங்கு
வாசிக்கும் மாணவர்கள் 110 பேர்களுக்கு
இலவசமாக உணவு அளிக்கப்படுகிறது
இவர்கள் கலப்பில்லாத சாமான் காண்
பது கஷ்டம். அவர்களுக்கு கொடுக்க
படும் சாப்பாட்டை பார்க்கச் சகிக்காது
இந்த குறையைத் தீர்க்க மாணவர்களின்
கார்டியன்களாய் திகழும், உபாத்யா
சிகாமணிகள் சிரத்தை செலுத்தவில்லை
அவர்கள் பாடம் சொல்லிக் கொடுப்பன
பகவான்தான் பார்க்கவேண்டும். வயி
றுக்குச் சோறின்றிப் போனலும் போக
றது, மூளைக்காவது எட்டக்கூடியது ஏத
வது உண்டா என்ருல் ஒன்றும் கிடை
யாது. படிப்பு சொல்லித்தருவதற்கு
திறமையில்லை.

தொலைந்து போகிறது. சாப்பா
ட்டு விஷயத்தில் பெருந்தன்ன
யாக நடக்கும் விரிந்த நோக்கு இல்லா
கிடக்கிறது. அவர்களுக்கு வண்டியோ
டும் வழக்கமிருக்கிறதே அதுதான் யாரு
கும் வருத்தம்தரும். 1943-ம்வருஷம் மாடு
ளைப்போல்மாணவர்களை அடிப்பது, நொ

யப்புடை...
கேட்கப்ப...
களுக்கே ...
யென்ருல்...
மட்டும் ...
அதைச் ...
கம். ஓரத்...
இருக்கிற...
தினர்கள்...
கம் நாடெ...
ஓரத்தநா...
தின்கீழ் ...

## காந்திஜீ...

காந்திஜீ...
மாணவர்...
இயற்கை...
ளல்ல.
உண்ணு...
மானங்க...
பத்திரிகை...
டன. இ...
தது போ...
த்து சங்...

# ...தங்களிடையே ...க்கு ஆதரவில்லை

ணம். இன்னும் ஆந்திரா, தமிழ் ஒற்றுமை வெகு குறைவு. இதை வைத்துக் கொண்டு அதிகாரிகள் அடக்குமுறைசெய்வார்கள்.

### சேவைக்குப் பாராட்டு

இந்தக் குழப்பங்களை ஒழித்தது நம் தோழர்களின் முதல்வேலை. பிளாக்கில் தொண்டர்கள், பிளாக் கமிட்டி, ஏற்படுத்தினார்கள். பிளாக்குகளைச் சுத்தமாக வைத்துக்கொள்ளவும், உணவு நேரச் சச்சரவுகளை நிறுத்துவதற்கு இது உதவிற்று. கிளம்பிய சில சச்சரவுகளையும் கமிட்டி தீர்த்து வைத்தது. அமைதி யேற்பட்டது அனைவருக்கும் ஆச்சரியமாகத் தானிருந்தது. அதற்குப் பிறகு தான் அரசியல் தலையெடுத்தது.

60 பேர் வரை நம் தோழர்களுடன் விவாதித்து நம் கொள்கையைத் தெரிந்து கொண்டு வந்தார்கள். பாகிஸ்தான் போன்ற பிரச்னைகளைப் பற்றி நம் தோழர்கள் சொல்வதை பொறுமையுடன் கேட்டு அதைப்பற்றி தீர ஆலோசித்தனர். லெனின் தினத்தன்று 500 பேர் வரை பிளாக்குகளில்கூடினார்கள். நம் கொள்கையை எடுத்துச் சொன்னபோது எல்லோரும் கேட்டனர். சுதந்திர தினத்தன்று பார்வர்ட் பிளாக்குக்காரர்கள் நாசவேலையை சேர்த்துள்ள பிரதிக்ஞை எடுத்துச்கொள்ள வேண்டுமென்று சொல்லத் துணியவில்லை. அது ஒப்புக்கொள்ளப்படாது என்பதை அவர்கள் தெரிந்து கொண்டனர். 300 பேர் வரை பழைய பிரதிக்ஞை எடுத்துக் கொண்டனர்; நம்முடைய கொள்கை நன்கு விளக்கப்பட்டது.

காந்திஜீயின் உண்ணாவிரத சமயத்தில் எல்லாத் தோழர்களும் இரண்டு தினங்கள் உண்ணாவிரத மிருந்தனர். நம் தோழர்களும் பங்கெடுத்துக்கொண்டனர்.

கல்கத்தாவில் வெடிகுண்டு விழுந்த காலத்தில், 150 பேர் மட்டுமே சந்தோஷப்பட்டனர். அதில் பார்வர்ட் பிளாக்கர்கள் சிலர். இவர்களுக்கு படையெடுப்பு வந்துவிட்டது என்ற ஆனந்தம். ஆனால் மற்றவர்கள் அப்படியில்லை. அரசியல் நெருக்கடி தீர்ந்துவிடும் என்று நினைத்தார்கள். அதனால் சர்க்கார் இறங்கி வந்துவிடும் என்று தவறாக எதிர்பார்த்தார்கள்.

### எதிர்ப்பு மறைகிறது

இரண்டு மூன்று மாதத்தில் நம் தோழர்களுக்கு இருந்த எதிர்ப்பு குறைந்துகொண்டே வந்தது. இன்று எதிர்ப்பு இல்லையென்றே சொல்லலாம். "போராட்டத்தை"பற்றிப் புனராலோசனை செய்கிறார்கள். நம் கொள்கையைப் பற்றி தெரிந்து கொள்ள ஆவலுடன் நம் தோழர்களிடம் வருகின்றனர். வராதவர்களை குறுக்கிடுவது கௌரவம் ஒன்றுதான்.

நம்தோழர்களின் எண்ணிக்கை இன்று மூன்று மடங்கு அதிகரித்துள்ளது. இது வன்றி நம்கட்சிக்கு 60 அநுதாபிகளும் இருக்கின்றனர். நம் கொள்கைதான் சரியான கொள்கை என்பது மேலும்மேலும் நமக்குக் கிடைக்கும் ஆதரவிலிருந்து ஊர்ஜிதமாகிறது.

---

# ...ங்கத்தை அங்கீகரி

யப்புடைப்பதுஎன்பது,மலைக்காடுகளிலும் கேட்கப்படாத விஷயம். உபாத்தியாயர்களுக்கே புத்தி வரவேண்டும். வரவில்லையென்றால் மாணவர்கள் இவ்விஷயத்தில் மட்டும் அவர்களுக்கு கற்பிக்கவேண்டும். அதைச் செய்வதற்கும்தான் மாணவர் சங்கம். ஒரத்தநாட்டிலும் மாணவர் சங்கம் இருக்கிறது. 100பேர்வரை அதில் அங்கத்தினர்கள் இருக்கின்றனர். மாணவர் சங்கம் நாடெங்கும் சட்டபூர்வமானது. ஆனால் ஒரத்தநாடு ஹெட் மாஸ்டரின் ஆதிக்கத்தின்கீழ் அதை நடக்க விடுவதில்லை.

### காந்திஜியை விடுவிக்க

காந்திஜியின் உண்ணாவிரத காலத்தில், மாணவர்களுக்கு உணர்ச்சி ஏற்படுவது இயற்கை. அவர்கள் நடைப்பிணங்களல்ல. சில மாணவர்கள் ஒருநாள் உண்ணாவிரதமிருந்தனர். கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டு தினசரிப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டுவிட்டன. இது ஹெட்மாஸ்டருக்கு இடி விழுந்தது போலாயிற்று. மாணவர்களை அழைத்து சங்கமிருக்கிறதா, 'ஜனசக்தி' வருகிறதா என்றெல்லாம் விசாரணை ஆரம்பித்துவிட்டார்.

'பொய்' சொல்லும்படி புகட்டும் விநோத பள்ளிக்கூடம் இது. காந்திஜி விடுதலைக்கு கூட்டம் நடந்தது உண்மை. பையன்களை கூப்பிட்டு "கூட்டம் நடக்கவில்லை" என்று பத்திரிகைக்கு எழுதுங்கள் என்று மாணவர்களை தொந்திரவு செய்வது உபாத்யாயர் கூட்டத்திற்கும், ஹெட்மாஸ்டர் பதவிக்குமே தகுதியல்ல.

மாணவர்கள் இம்மிரட்டல்களுக்கு அஞ்ச வேண்டியதில்லை. மாணவர் சங்கத்தில் சேர்ந்ததற்காக நடவடிக்கைகள் எடுப்பது, சங்கம் இன்னும் பலப்படாததினால். அதிகம்பேர் அதில் சேர்ந்து கட்டுப்பாட்டுடன் இருந்தால், அதிகாரிகள் சில்லரை சேஷ்டைகள் செய்யமாட்டார்கள். மாணவர்களின் குறைகள் தீரும். மாணவர்களின் உரிமைகளை ஒப்புக்கொண்டால்தான் மாணவர் - உபாத்யாயர் ஒற்றுமை சாத்யமாகும். மாணவர் - உபாத்யாயர் ஒற்றுமையையே மாணவர்கள் விரும்புகின்றனர்.

---

<u>மதுரை</u>

# விறகு வேண்டுமானால்

## மக்கள் கையில் விநியோகம்

மதுரையில் விறகுக் கடைகளில் ஒரே கூட்டம். நாள் முழுதும் ஆண் பெண் குழந்தை குட்டி கூட்டத்தை விறகுக்கடைக்குமுன் பார்க்கலாம். விறகு வந்து கடையில் இறங்குவது தான் தாமதம் ஒரு நொடிப் பொழுதில் பூராவும் காலியாகி விடுகிறது: விறகு கிடைத்தால் போதும் என்று பொதுமக்கள் ஏங்கி பலமணி நேரம் காத்திருக்கின்றனர். கடைசியில் கிடைக்காமல் ஏமாந்து வீடு திரும்புவதும் உண்டு.

### தொண்டர் படை வேண்டும்

கடைகளில் கூடியிருப்பவர்களுக்கோ எனக்கு முந்தி உனக்கு முந்தி,கிடைத்தால் போதும் என்ற மனோபாவம் இருக்கிறது இதனால்தான் குழப்பம்ஏற்படுகிறது. கூட்டத்தில் பல விபத்துகள் ஏற்படுகிறது. வியாபாரிக்குக் கும்மாளம்; இஷ்டமான விலை, நினைத்தமாதிரி எடை, ஜனங்களையும் கேவலமாக நடத்துவது. இதெல்லாம் ஆரம்பித்து விடுகிறார்கள். அதனால் ஜனங்கள் ஒருவர் பின் ஒருவராக ஒரு வரிசையில் நிற்கும் பழக்கம் வரவேண்டும். கடைக்கு ஆட்கள் வர வர அவ்வரிசையில் நின்று கொள்ள வேண்டும். முன்னால் வந்தவர்கள் முன்னும். பின்வந்தவர்கள் பின்னாலும்நிற்கும் முறை இது வரை பழகாத பொதுமக்களுக்கு தானாகவராது செய்யவும் மாட்டார்கள். இவ்வேலையைச் செய்ய செந்தொண்டர் படைகள் ஏற்படுத்த வேண்டும் பொறுமையாக அவர்களுக்கு'க்யூ'—அதாவது ஒரு வரிசையில்வந்த பிரகாரம் நிற்கும்—முறையை பொறுமையுடன் புகட்ட வேண்டும்.

இந்த வேலையை நம்தோழர்கள். பொது ஜன ஊழியர்கள் செய்யாவிட்டால் அது போலீஸாருக்கும் சிவிக் கார்டுகளுக்கும், ஏ. ஆர். பி. காரர்களுக்கும் விடுவதாகும். சாமான் வாங்காவிடில் போகிறது அடி உதைக்குத் தப்பினால் போதுமென்று ஜனங்கள் நினைக்க வேண்டிவரும். ஆதலால் விறகுப் பஞ்சம் ஏற்பட்டிருக்கும் இச்சமயத்தில் உடனடியாக செந்தொண்டர் படைகள் அமைத்து வேலை செய்ய வேண்டும்.

### பகல் கொள்ளை

மதுரையில் சிம்மக்கல்லில் ஹனுமார் கோயிலுக்குப் பக்கததில் ஒரு விறகுக் கடை. 12-3-43ம் தேதி அங்கு ரொம்பவும் தெரக்காயிருந்தது- தலைக்கு அரை தூக்குத் தருவதாக வியாபாரி கூறி. கொடுத்துவந்தார். ஜனங்கள் வாங்கிக்கொண்டு போனார்கள். நம் தோழர்கள் விறகு வாங்கிச் செல்லும் சில சிறுவர்களை நிறுத்தி விலை எடை விஷயங்களை விசாரித்தனர். அரை தூக்கு என்று கேட்டதும், விறகு அவ்வளவு இருக்கமுடியாது என்று சந்தேகம் ஏற்பட்டது. பக்கத்திலேயே வேறொரு கடையில் நிறுத்துப்பார்த்தனர். சரியாக கால் தூக்குத்தான் இருந்தது! பகற் கொள்ளை!!

நம்தோழர்கள் அச்சிறுவர்களை திருப்பி வாங்கின இந்த விறகு கடைக்கே அழைத்துவந்தனர். அங்கு இச்சிறுவர்கள் மாதிரியே அரை தூக்கு என்று ஏமாந்து கால் தூக்கு வாங்கிச் சென்ற சில பெண்களும் திரும்பிவந்து வியாபாரியிடம் வாதாடிக் கொண்டு இருந்தனர். இதுவரை சும்மாயிருந்த மற்ற ஜனங்களும் இவர்களுடன் சேர்ந்து அவ்வக்கிரமத்தை கண்டித்தனர். வியாபாரிக்குக் கோபம் வந்தது. விறகை வாங்கிக்கொண்டு, பணத்தைத் திருப்பிக் கொடுத்து, கடையை மூடினார். ஜனங்கள் தலையில் மிளகாய் அரைப்பது. ஐய்யய்யோ எரிகிறதே யென்றால் கோபம். உனக்கு ஒன்றும்கிடையாது என்று மிரட்டுவது. இதைபொதுமக்கள் விட்டுக்கொண்டிருக்க முடியாது. நம் தோழர்கள் அங்கிருந்தவர்களை கூட்டிக்கொண்டு ஒருமுகமாக விறகு விற்க வேண்டுமென்று வியாபாரியை வற்புறுத்தினார்கள். மக்கள் திரண்டு நிற்கும்போது மாட்டேனென்று சொல்ல முடியவில்லை. பல்லை நெறுநெறுவென்று கடித்தார். ஆனால் ஒழுங்காக விறகை கொடுக்க ஆரம்பித்தார்.

### மண்ணெண்ணைக்குப் பிறகு விறகுக்காக

இருந்த விறகெல்லாம் ஆயிற்று. உடனே நம் தோழர் மீது சீறி விழுந்தார். ஜனங்கள் நம் தோழரை மேலும் மேலும் ஆதரிப்பதை பார்த்ததும் அவருக்கே ஆச்சரியம் வந்தது. "நீங்கள் யார்" என்றார். 'மண்ணெண்ணை கிடைக்காமல் தவித்த காலத்தில் நீங்களும் தானே கையெழுத்துப் போட்டீர்கள். அதனால் பலன் ஏற்பட்டதல்லவா. எண்ணை கிடைக்க ஆரம்பித்தது. அதைச் செய்யமுன்வந்தது கம்யூனிஸ்ட்டுக் கட்சி. அதில் அங்கத்தினர் நான்" என்றார். கூட்டத்திலிருந்தவர் கம்யூனிஸ்ட்டுக் கட்சியை வாயாரப் புகழ்ந்தனர்.

ஒரு தோழர் இவ்வளவு செய்ய முடிந்தது. அன்று விறகு விநியோகத்தை ஒழுங்குபடுத்த முடிந்தது. இது எதைக் காண்பிக்கிறது "ஓ! எல்லாமே ஊழல் நாமொன்றும் செய்ய முடியாது' என்று மனந்தளருவது மக்களுக்குத் துரோகம் செய்யும் தோல்வி மனப்பான்மை. ஜனங்களை திரட்டி இவற்றைப் பெற முடியும். இதற்குத் தினசரி வீடு வீடாகச் சென்று வேலை செய்ய வேண்டும். ஜனங்களின் தேவைகளை கணக்கெடுக்க வேண்டும் அன்றாடக் குறைகளைத் தீர்க்க ஜனங்களின் ஆதரவுகொண்டு கவர்மெண்டை நிர்பந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும். இப்பணியைச் செய்ய பொதுஜன உணவுக் கமிட்டிகள் ஏற்படுத்தவேண்டும். ஜனங்களுக்கு விறகுபஞ்சத்தின் காரணங்கள், அதைப்பெறும் வழி இவற்றை எடுத்துச் சொல்ல வேண்டும்; ஊர்வலங்கள். கூட்டங்கள் தீர்மானங்கள், தூதுகோஷ்டிகள், எல்லா வழிகளிலும் மும்முரமாக ஆர்ப்பாட்டம் செய்யவேண்டும்.

1. உடனடி உணவுக் கமிட்டிகள்.

2. செந்தொண்டர் படை ஒவ்வொரு இடத்திலும். பொதுஜன ஆதரவுடன் இவற்றை நிறுவுக.

---

<u>வண்ணாரப்பேட்டை</u>

# உணவுக் கமிட்டி மூலம் விறகுப் பஞ்சம் தீரும்

விறகுப் பஞ்சத்தில் நம் தோழர்கள் குறிப்பான கோரிக்கைகளை கலெக்டருக்கு அனுப்பியிருக்கிறார்கள்; அந்த யோசனைகள் ஜனங்களைப் பட்டினி கிடந்து மடியாமல் பாதுகாக்க இன்றியமையாதவைகள். ஜனங்கள் அக்கோரிக்கையை ஆதரித்து நிற்கின்றனர். ஜனங்களின் ஆதரவு அதிகரிக்க அதிகரிக்க அக் கோரிக்கைகளைக் கொடுத்தாக வேண்டியிருக்கும். மறுக்க முடியாது.

உணவுக் கமிட்டி (1) பென்ஷன்காரர்கள் லேன், (2) லாலா குண்டா, (3) 5–வது டிவிஷன், இவ்விடங்களில் வீடுவீடாகச் சென்று வேலை செய்தது. இங்கு வீடுகளும், குடிசைகளும் சேர்ந்து 3,000 இருக்கின்றன. அங்கு வசிப்பவர்கள் பெரும்பாலோர் பீடித் தொழிலாளிகள், பால்காரர்கள், வண்ணார்கள்; சில்லரை வியாபாரிகள், தினசரிக் கூலிக்காரர்கள். இவர்களுக்கெல்லாம் சொற்ப வருமானம். அன்றாடம் வேலை செய்தால்தான் அடுப்பு மூட்ட முடியும். இவர்கள் விறகு வாங்குவதற்காக நாள் முழுதும் டிபோக்களில் காத்திருக்கவேண்டி வந்தால் வயிற்றுப் பிழைப்பிற்கு என்ன செய்வது ?

இப்பொழுது இந்த டிவிஷனில் 9 விறகு டிபோக்களிருக்கின்றன. இங்கு வசிக்கும் மக்களின் ஒருநாளைய தேவை 17 டன். விறகில்லையென்று இருக்கும் இந்த 9 டிபோக்களில் சில மூடிக் கிடக்கின்றன. விறகு இருக்கும் டிபோக்கள் இரவில் மட்டுமே திறக்கின்றன. பணமுள்ளவர்கள் அதைப் பார்த்துக் கொள்கிறார்கள். இப்படி டிபோக்கள் இருப்பதும் இல்லாததும், ஏழை எளியவர்களுக்கு உதவாது போகிறது, விறகின்றி இம்மக்கள் பரிதபிக்கின்றனர்.

### விறகு போதாது

இந்த டிபோக்களுக்கு கவர்ன்மெண்டு தினசரி 17 டன் விறகு சப்ளை செய்ய வேண்டும். இது சர்க்காரின் கடமை. இது மக்களின் உடனடிக் கோரிக்கை. 9 டிபோக்களிலும் உள்ள சிறு வியாபாரிகளினிடம் அந்த இடத்தின் தேவைக்குச் சரியாக எவ்வளவு டன் ஸ்டாக் வேண்டுமென்றும் உணவுக் கமிட்டி குறிப்பிட்டு கலெக்டருக்குத் தெரிவித்திருக்கிறது. இல்லாவிடில் டிபோக்காரர்கள் கள்ள மார்க்கெட்டுகளில் விறகு வாங்கவேண்டி வருகிறது. டன்னுக்கு ரூ. 30, ரூ. 40 என்று வாங்கி, அச்சுமையை ஏழை மக்களின் தலையில் சுமத்துகிறார்கள். வாங்கியதற்கு மேல் லாபம் வைத்து விற்கிறார்கள்.

மேல் கூறியவற்றை செய்தால் மட்டும் போதாது. விலை நிர்ணயத்தில், சிறு வியாபாரிகளுக்கு வியாபாரம் செய்யமுடியாத மாதிரி செய்யப்படுகிறது. சிறு வியாபாரிகள் கவர்ன்மெண்டு டிபோக்களிலிருந்து வாங்கினால் கீழ்க்கண்ட விகிதாசாரப்படி செலவாகிறது :—

| | | | | |
|---|---|---|---|---|
| விறகு டன் 1 க்கு | ரூ. | 16 | 8 | 0 |
| 1 டன்னுக்கு வண்டிச் சத்தம் | ரூ. | 1 | 8 | 0 |
| விறகு வெட்டுக் கூலி | ரூ. | 1 | 14 | 0 |
| காய்ச்சலினாலும் வெட்டினாலும் ஏற்படும்குறைவு | ரூ. | 0 | 8 | 0 |
| டிபோ விற்கு வாடகை | ரூ. | 0 | 4 | 0 |
| மொத்தம் | ரூ. | 20 | 10 | 0 |

இங்ஙனம் 1 டன்னுக்கு சிறு வியாபாரிகளுக்கு மொத்தம் கொள்முதல் ரூ. 20-10-0 ஆகிறது.சர்க்கார் கட்டுப்பாட்டு விலைப்படி டன் 20 ரூபாய்க்குத்தான் விற்கவேண்டுமென்று சட்டம் செய்கிறார்கள். இதனால் ஜனங்களும் இவர்களும்அடித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. கொள்ளை முதலாளிகளும், சர்க்காரும் கவலையின்றி இருக்கலாம். விறகு ஒரு டன் 20 ரூபாய்க்குத்தான் விற்க வேண்டும். அதற்காக சர்க்கார் டிபோவில் சிறு வியாபாரிகளுக்குவிறகுடன் 15ரூபாய்க்கு கொடுக்க வேண்டும். இதற்கு ரயில்வே சார்ஜை குறைக்கவேண்டும். பெரும் முதலாளிகளின் கொள்ளை லாபத்தைக் குறைக்க வேண்டும். கள்ள சேமிப்புகளை கண்டு பிடிக்க ஜனங்களின் ஆதரவையும், ஒத்துழைப்பையும் பெறவேண்டும்.

அதை விட்டுவிட்டு கவர்மெண்டின் போக்கு நிலைமையை இன்னும் அபாயகரமாக்குகிறது.

### விறகு விலை ஏறுவது ஏன் ?

விறகுப் பஞ்சத்திற்குக் காரணம் நாட்டில் மரங்கள் திடீரென்று மறைந்துவிடவில்லை. முதலாளிகளின் கள்ள டிபோக்களில் ஒளிந்துகிடக்கிறது. ஆதலால் விறகு ஜனங்களுக்குக் கிடைக்கவில்லை. உணவுக் கமிட்டிகள் 1 டன் விறகு 15 ரூபாய் ஆக்கப்பட்டால் நிலைமையை சமாளிக்கலாம் என்று கோரிற்று. அதைக் குறைக்க கவர்மெண்டுக்கு நெஞ்சில் உரமில்லை. அதற்கு ஆபாசமானதொரு உபாயத்தைக் கையாண்டிருக்கிறார்கள். டன்னுக்கு 20 ரூபாய் ஆக இருந்த கட்டுப்பாட்டுவிலையை 24 ரூ. ஆக்கியிருக்கிறார்கள். இதனால் விறகு சென்னையில் வந்து குவிந்து போகும், பஞ்சம் தீரும் என்று யோசனை போலும். விறகு வருவது அதிகரித்தது என்னமோ வாஸ்தவந்தான்! ஆனால் பொது மக்களுக்குக் கிடைப்பதில்லை. விறகு வர ஆரம்பித்துவிட்டதென்று கவர்மெண்டு விறகு சப்ளை நடத்துவதில்லை. வியாபாரிகள் விறகை கொழுத்த லாபத்திற்கு மோட்டார் கம்பெனிகளும், அலுமினியம் கம்பெனிக்கும் கரிக்காக கொடுக்

(3–ம் பக்கம் பார்க்க)

# போனஸ் பிடித்தம் பாதுகாப்புக்குத் தடை

## அடக்குமுறையை நிறுத்து தோழர்களை விடுதலை செய்

மதுரையில் போனஸ் பிரச்சினைக்காகத் தொழிலாளர் ஒற்றுமை திரண்டு வந்தது. மில் நிர்வாகத்திற்கு கிலி பிடிக்க ஆரம்பித்தது. ஸ்ரீ. வரதராஜுலு நாயுடுவின் பிற்போக்கு சங்கம் தொழிலாளர்களைக் காட்டிக் கொடுப்பது கண்டு தொழிலாளிகள் ஆத்திரமடைந்தனர். நாயுடுவின் தலைமையை நிராகரித்தனர். இந்த நிலைமையில் தொழிலாளிகளை அடக்குவதற்கு அதிகாரவர்க்கமும் உள்ளே நுழைந்தது. ஸ்தல அதிகாரிகளின் தர்பார் இன்று மதுரையில் நடந்து வருகிறது.

ஹார்வி மில் தொழிலாளர்கள் கேட்டதெல்லாம் என்ன! 'எல்லோருக்கும் போனஸ் வேண்டும்; போனஸ் முழுவதும் பிடித்தமின்றி வேண்டும்; போனஸ் கையில் ரொக்கமாய் வேண்டும்.'' இது சுமார் 20,000 தொழிலாளிகளின் நியாயமான கோரிக்கை. இதை எதிர்த்து நிற்பது கொள்ளை லாபமடிக்கும் [illegible] மில் நிர்வாகமும், ஸ்ரீ. எ[illegible] ஆர். வரதராஜுலு நாயுடுவும் [illegible] (தொழிலாளர் தலைவர்!) காட்டின் நிலைமையை உணராது மக்களை ஆத்திரமூட்டும் அதிகார வர்க்கமும்.

### பாதுகாப்புக்கு போனஸ் வேண்டும்

போனஸில் பாதி பிடிப்பதென்பது யுத்தக் கடன் சேவிங்ஸ் பண்டுக்கென்று சொல்லப்பட்டது. இதற்குத் தொழிலாளிகள் தாங்களாகக் கொடுத்துதவ வேண்டுமே தவிர நிர்ப்பந்த வசூல் கூடாது. இதை சர்க்கார் அதிகாரிகளே அடிக்கடி வற்புறுத்தி யிருக்கின்றனர். நிர்பந்த வசூல் முறைகள் பாதுகாப்பை பாதிக்கின்றன; யுத்த எதிர்ப்பு மனப்பான்மையைத்தான் கிளப்புகின்றன. இதை அனுமதிப்பது நாட்டை பாஸிஸ்டுகளுக்குக் காட்டிக் கொடுக்கும் செய்கையாகும்.

தொழிலாள வர்க்கம் இன்று நாடு காக்கும் பணியில் முன்னணியில் நிற்கிறது. உற்பத்திப் பெருக்கில் அசாத்திய கவலை கொண்டுள்ளது. பாஸிஸ்டு ஆக்கிரமிப்பைத் தகர்த்தெறிந்து நாட்டை வெற்றிகரமாய்ப் பாதுகாப்பதில் தொழிலாளிகளுக்குள்ள அக்கரை யாருக்கும் கிடையாது. இந்த பாதுகாப்பிற் கவசியமான உற்பத்திப் பெருக்கை உத்தேசித்தே இன்று மதுரைத் தொழிலாளிகள் 2 மாத போனஸ் முழுவதையும் ரொக்கமாகப் பெறவேண்டி யிருக்கிறது. விலைவாசி உயர்வு தாங்க முடியவில்லை. முதலாளிகளோ பாதுகாப்பு என்ற பெயரில் கொள்ளை லாபமடிக்கின்றனர். ஆனால் வாழ்க்கையை நடத்த தொழிலாளிகள் போனஸை ரொக்கமாகக் கேட்டால் இதே முதலாளிகள் விரட்டுகின்றனர், உருட்டுகின்றனர், போலீஸ் படைகளை ஏவிவிட்டுப் பார்க்கின்றனர். கம்யூனிஸ்டுகள் தொழிலாளிகளுக்காக உறுதியாகப் பாடுபடுவதைக் கண்டால் பிடிக்கவில்லை. சென்ற ஒரு வாரமாக மதுரையில் கம்யூனிஸ்ட் வேட்டை பலமாயிருக்கிறது.

### கம்யூனிஸ்ட் வேட்டை

16-3-43ந் தேதி கம்யூனிஸ்ப் கட்சியின் மதுரை ஜில்லாக் கமிட்டி ஆபீசில் போலீஸார் வந்து அங்கிருந்த சுமார் 22 பேரையும் அரெஸ்டு செய்ய விரும்பினர். இறுதியில் தோழர் சுப்பிரமணிய சர்மா (மாகாணக் கமிட்டி அங்கத்தினர்) தோழர்கள் ரத்தினம், கே. பி. ஜானகி, (ஜில்லா கமிட்டி அங்கத்தினர்கள்) தோழர் வீராசாமி இவர்களை மட்டும் கைதுசெய்து சென்றனர். மீண்டும் திரும்பினர் போலீசார். ஜில்லாக்கமிட்டி ஆபீசை சோதனை போட்டனர். ஹார்வி மில் தொழிலாளிகளின் போனஸ் பிரச்சினை சம்பந்தமான துண்டுப் பிரசுரங்கள், புள்ளி விவரங்களை கைப்பற்றினர். அன்றும் மறுதினமும் முக்கிய தொழிலாளிகள் தொடர்ச்சியாகக் கைது செய்யப்பட்டனர். இதுவரை 19 தோழர்கள் கைது செய்யப்பட்டு அவர்கள் மேல் வழக்குத் தொடரப்படப் போவதாய் அறிகிறோம்.

இவ்வளவு தூண்டுதலுக்கும் இரையாகாமல் தொழிலாளிகள் தங்களது ஒற்றுமையை வளர்த்துக் கொண்டதுதான் எல்லோரையுப் பிரமிக்கச் செய்துள்ளது. 15ந் தேதி மாலை 2 ஷிப்ட் தொழிலாளிகள் போனஸ் சம்பந்தமாய் மானேஜரைக் காண்பதெனக் கூடினர். சுமார் 4000 தொழிலாளிகள் கூட்டத்தைப் பாதுகாக்கத் தொண்டர்கள். தொழிலாளிகளுக்குத் தலைமை தாங்கிப் பேச 7 பிரதிநிதிகள். முதலில் மானேஜர் பார்க்க மறுத்தார். ''மானேஜரைப் பார்க்காது திரும்போம்; எல்லோருக்கும் போனஸ்: போனஸ் முழுவதும் ரொக்கமாய்'' என்ற கோஷங்கள் கிளம்பின. வெளியில் வந்தார் மானேஜர். இரவு ஷிப்ட் தொழிலாளிகளை வேலைக்குச் செல்லும்படி தொழிலாளிகளே கேட்டுக் கொண்டதில் அவர்கள் சென்று விட்டனர். மற்றவர் அமைதியா யிருந்தனர். ஆனால் ஒவ்வொரு முகத்திலும் உறுதி ஜொலித்தது.

### அமைதியைக் கண்டு பிரமித்தனர்

7½ மணி ஆயிற்று. வந்தது போலீஸ் பட்டாளம். 4 ரிஸர்வ் லாரிகள், டிப்டி சூப்பிரண்டண்டு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் வகையரா. கலெக்டரும் பிரசன்னமானர். கூட்டத்திலிருந்த அமைதி அவர்களைத் திகைக்கச் [illegible] செய்தது. ஸ்ட்ரைக் [illegible] செய்யக் கூடாதென்று உபதேசிக்கப் பார்த்தனர். ஸ்ட்ரைக் கூட்டமல்ல வென்று விளக்கப்பட்ட பின் சும்மா இருந்தனர். இறுதியில் தொழிலாளிகளின் 7 பிரதிநிதிகளும் மறுநாள் ஜில்லா கலெக்டரை 12 மணிக்குக் கண்டு குறைகளைக் கூற வேண்டுமென்றனர். தொழிலாளிகள் ஒப்புக்கொண்டு கூட்டம் அமைதியாய்க் கலைந்தது.

மறுதினம் கலெக்டர் தொனி மாறி விட்டது. 1942-ம் வருட போனஸைப் பற்றி 1943ல் கிளர்ச்சி என்ன என்ற பிரச்சினையைக் கிளப்பினர். வரதராஜுலு நாயுடு பேச்சைக் கேளுங்களென்று உபதேசித்தார். வரதராஜுலு நாயுடு சங்கம் இன்று முதலாளியின் சங்கம் தொழிலாளிகள் சங்கமல்ல என்று கூறினர்கள். 7 பிரதிநிதிகளும், மாலை 4½ மணிக்கு மில்லிற்குள் வந்து சந்திக்கும்படி சொன்னர் கலெக்டர் ஆனல் 3½மணிக்கே அதிகார வர்க்கத்தின் தாக்குதல் ஆரம்பித்து விட்டது. கைது செய்யப்பட்டனர் முக்கிய தோழர்களெல்லாம்.

### வெளியூர் சமாசாரம் பேசாதே

4½ மணி மீட்டிங்கில் மில்லிற்குள் நடந்ததென்ன! ''யூனியன் தலைவர் வரதராஜுலு நாயுடுவுக்கும் மில் நிர்வாகத்திற்கும் உள்ள ஒப்பந்தப்படி மில் நிர்வாகம் நடக்கிறது. உங்களுக்கு வேண்டுமானல் யூனியனில் மெஜாரிட்டியாய் வந்த பிறகு இதை மாற்றிக் கொள்ளுங்கள். அதுவரையில் கப் சிப்பென்று சும்மா இருக்க வேண்டும். வேறு ஊர்சமாசாரம் இங்கே வேண்டாம். நான் ஜில்லா அதிகாரி தெரியுமோ இல்லையோ'' என்றார் கலெக்டர். ''தலைவர்'' வரதராஜுலு நாயுடுவைப் பின்பற்றும்படி தொழிலர்ளர் பிரதிநிதிகளுக்கு உபதேசித்தார் மில் மானேஜர். தொழிலாளிகள் கூட்டம் போட்டுப் பேசுவதற்கும் அனுமதி மறுக்கப்பட்டது. மில் கேட்டில் ரிஸர்வ் லாரிகள் தயாராய் நின்றன. ஆனல் ஏழு பிரதிநிதிகளையும் எதிர்பார்த்து நின்ற தொழிலாளர்களின் திரண்ட சக்தியைப் பார்த்து ஸ்தல அதிகாரிகள் சும்மா இருக்க நேர்ந்தது.

### தொடர்ச்சியாக அரெஸ்டுகள்

17-ந் தேதி மத்தியானம் சுமார் 1 மணி இருக்கும். கலெக்டரைப் பார்க்க சென்ற 7 பேரில் ஒருவரான தோழர் நாகு தெருவில் சென்றுகொண்டிருந்தார். சப் இன்ஸ்பெக்டர் அழைத்துவரச் சொன்னராம் அவரை. சென்றதும் கைது செய்யப்பட்டார். அன்று மாலை 6 மணிக்கு மற்ற 6 பேரும் மில்லுக்குள்ளேயே ஆபீசில் வரவழைக்கப்பட்டு போலீசில் ஒப்படைக்கப்பட்டனர்.

17-ம் தேதிதான் போனஸ் சீட்டுகள் வழங்கப்படும் தினம். ஆரம்பத்தில் எவரும்செல்லவில்லை. ஆனல் ஸ்ரீமான் நாயுடுவின் கையாட்களுக்குத் தொழிலாளிகளை மிரட்டி போனசை வாங்க நிர்ப்பந்திப்பதற்கு சர்வ சுதந்திரமும் கொடுக்கப்பட்டது. சீட்டுவாங்க விரும்பாத பெண்கள் கள் திட்டப்பட்டனர், மிரட்டப்பட்டனர். போனசை மறுப்பவர்களுக்கு கல்தாதான் என்று கழுத்தைப்பிடித்துத் தள்ளப்பட்டனர் சிலர். நிர்ப்பந்த முறையில் சீட்டுகள் வழங்கப்பட்டன.

'ரிங்ப்ரேம்' டிப்பார்ட்மெண்டில் ஒரு சிறுவன். 6 வருட சர்விஸ். போனஸ் வாங்கக்கூடாதென்று தொழிலாளிகளிடம் பிரசாரம் செய்ததாக ஆபீசுக்கு அழைக்கப்பட்டான். முழுபோனசையும் ரொக்கமாய்க் கொடுக்கவேண்டுமென்று வாதாடினான். வந்ததுகோபம் மானேஜருக்கு. கண்கள் சிவந்தன. ''முழுபோனசையும் கையில் கொடுத்து வெளியே தள்ளு'' என்று ஆர்டர் பிறந்தது. மறுநிமிடமே கணக்குகள் தீர்க்கப்பட்டு ''கேட் பாஸ்'' வழங்கப்பட்டுவிட்டது. 18ந் தேதியும் இவ்வாறே ஒவ்வொரு ஷிப்டிலும் நிர்ப்பந்தப்படுத்தி போனஸ் சீட்டுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஏற்கெனவே அரெஸ்டானவர்கள் போக இன்னும் 25 தோழர்களுக்கு அரெஸ்டு வாரெண்டுகளிருப்பதாக வதந்தி.

### அடக்குமுறைக்கு அஞ்சமாட்டோம்

ஆனல் மதுரைத் தொழிலாளிகளின் வளரும் ஒற்றுமையை அதிகாரவர்க்கமும் ஹார்விமில்நிர்வாகமும் ஒருக்காலும்தடுக்க முடியாது. நீண்டகாலத் தூக்கத்திலிருந்து மதுரைத் தொழிலாளிகள் விழித்தெழுந்திருக்கின்றனர். துரோகி வரதராஜுலு நாயுடுவின் சூழ்ச்சியைக் கண்ணாரக் கண்டுவிட்டனர். கம்யூனிஸ்டுகள் காட்டும் பாதையில் உரிமைகளைப் பெறமுடியும் என்ற உறுதி கொண்டுவிட்டனர். அதிகாரவர்க்கத்தின் ஆத்திரமூட்டும் செயல்களும், மில் நிர்வாகத்தின் இறுமாப்பும் மதுரைத் தொழிலாளிகளை வேலை நிறுத்தத்திற்குத் தூண்டமுடியவில்லை சில ட்ராட்ஸ்கிய கும்பல்களும் இடைவிடாது தொழிலாளிகளை ''ஸ்ட்ரைக்'' செய்யுமாறு தூண்டிவந்தனர். அவர்களது பிரசாரமும் பலிக்கவில்லை. நாட்டில் குழப்பமேற்படாமல் உற்பத்திதடைப்படாமல் நாடு நாசமாய்விடாமல் காப்பாற்றுவது தொழிலாளர்களின் பொறுப்பு என்பதை ஹார்விமில் தொழிலாளிகள் நிரூபித்து விட்டனர். அவர்களது தலைவர்களை இன்னும் அதிகாரவர்க்கம் சிறையில்வைத்திருக்குமானல் அதைவிட அர்த்தமற்ற செய்கை எதுவும் இருக்காது. அடக்குமுறையை அவிழ்த்துவிட்டுத் தொழிலாளிகளின் நியாயமான கோரிக்கைகளை மறுத்துவிட முடியாது. கோரிக்கைகள் பெறும்வரை, அரெஸ்டு ஆன தோழர்கள் விடுதலை ஆகும் வரை ஒன்றுபட்டுத் தொடர்ச்சியாய்க் கிளர்ச்சிசெய்தே தீருவார்கள்.

ஆத்திரமூட்டலுக்கிரையாகாமல் அமைதியைக் காத்து ஐந்தாம்படையை முறியடித்துள்ளனர் மதுரைத் தோழர்கள். பாதுகாப்புக்காக போனஸ் அவசியம் என்ற ஸ்லோகன் வெற்றியாகும் வரை தொழிலாளரின் கிளர்ச்சி தொடர்ச்சியாக நடந்தே தீருமென்பது திண்ணம். பாதி போனசைப் பிடிப்பது பாதுகாப்புக்குதவும் செய்கையல்ல. போனஸை முழுவதும் வழங்குவதே பாதுகாப்புக்கின்றியமையாததாகும். இதை அதிகாரிகள் உணரவேண்டும். தொழிலாளிகளின் தேசபக்தி மிகுந்த கொள்கைக்குப் பணிந்தே ஆகவேண்டும்.

## தொழிலாள துரோகியின் சூழ்ச்சியை தகர்ப்போம்

''இன்றைய நிலைமையை சமாளிக்க எல்லோருக்கும் போனஸ் ரொக்கமாய் வேண்டும். போனஸில் பாதி பிடிப்பதை விட போனஸை வழங்குவதே பாதுகாப்புக்குப் பிரதான உதவி'' என்று விக்கிரம சிங்கபுரம் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் தொழிலாளர்களைத் திரட்டியது. ஸ்ரீ. எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு மில் நிர்வாகத்திற்குக் கொடுத்த வாக்குறுதியைத் தொழிலாளிகள் நிராகரித்தனர். 6-3-43 இரண்டு மாத போனஸும் ரொக்கமாய் வேண்டும்என்று மகஜரில் கையெழுத்துக்கள் ஆரம்பமாயின. 7-3-43ல் ''மெகாப் போன்'' வைத்துத் தெருத்தெருவாகப் பிரசாரம் நடந்தது. தொழிலாளிகள் வரும் மெயின்ரோட்டில் தொழிலாளர் கோரிக்கைகள் கொண்ட போர்டு [illegible] வைக்கப்பட்டது. 1000 பெண் தொழிலாளரிடமும் பிரசாரம்நடந்தது. நாயுடுவும் மானேஜ்மெண்டும் நம்மை என்னசெய்ய முடியும் நாம் ஒன்றுபடுவோம் என்றனர் தொழிலாளிகள்.

### ரௌடிகள் ராஜ்யம்

தொழிலாளர்கள் திரளுவது மில் நிர்வாகத்திற்கும் ஸ்ரீ. நாயுடுவுக்கும் பொறுக்கவில்லை. 7-ந் தேதி இரவு சுமார் 8 மணி இருக்கும். நமது தோழர் எம். கே. சாமி ''மெகா போன்'' வைத்துப் பேசியதற்காக ரௌடிகளால் தாக்கப்பட்டார். கையெழுத்து வாங்கச் சென்ற மற்றொரு தோழர் போலீஸ் ஸ்டேஷனுக்கு இழுத்துச் செல்லப்பட்டார். கூட்டத்திலிருந்து வந்து கொண்டிருந்த தோழர் கருப்பையாவைக் காலிகள் தாக்கினர். இந்த பாஸிஸ்டு முறைகளினல் நமது தோழர்கள் மிரண்டு விடவில்லை. தூண்டாலுக் கிரையாகாமல் பொறுமையுடனும் உறுதியுடன் தொழிலாளர்களைத் திரட்டினர்.

14-3-43 பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் சார்பாக ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. 4000 தொழிலாளிகள் வந்தனர். இரண்டு மாத போனஸும் ரொக்கமாய் வேண்டும் என்ற தீர்மானம் ஏகமனதாய் நிறைவேற்றப்பட்டது. பாப்பங்குளம் சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் தலைமை வகித்தார். தோழர் மீனுட்சி நாதன் போனசின் அவசியத்தை விளக்கினர். தொழிலாளிகளின் விருப்பத்திற்கிணங்க மில் நிர்வாகம் நடக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். ஸ்ரீமான் எஸ். ஆர். வரதராஜுலு நாயுடுவுக்கு இனி விக்கிரம சிங்கபுரத்தில் ஆதரவு கிடைப்பது கஷ்டமென்பதை அன்று ஆயிரக்கணக்கில் கூடிய தொழிலாளிகள் நிரூபித்து விட்டனர். மானேஜ்மெண்டுக்கு அவர் கொடுத்த வாக்குறுதியை உதறித் தள்ளினர் தொழிலாளிகள்.

15-3-43 தோழர்கள் உலகநாதன் மீனுட்சி நாதன் நல்லசிவன் ஆகிய மூன்று பேர் கொண்ட ஒரு தூது கோஷ்டி மில் மானேஜ்மெண்டைக் காண விரும்பியது. மானேஜர் பேட்டி காண மறுத்துவிட்டார்.

17-3-43ந் தேதி மீண்டும் ஒரு பெரிய பொதுக் கூட்டம் நடந்தது. 2500 (பகல் ஷிப்ட்) தொழிலாளிகள் வந்தனர். தொழிலாளிகளின் அபிப்பிராயத்தை ஜனநாயக முறையில் உணராமல் முதலாளிக்குத் தாளம் போடும் ஸ்ரீமான் நாயுடுவின் சங்கம் முதலாளியின் சங்கம்தான் என்று கூட்டத்திலிருந்த அனைவரும் கோஷித்தனர். போனஸ் கேட்டால் டிஸ்மிஸ் கிடைக்கும் என்று தொழிலாளிகளிடம் பீதியைப் பரப்பும் நாயுடுவின் பிரசாரம் அடியோடு வெறுக்கப்படுகிறது.

### நிர்ப்பந்த வசூல்

17-3-43 பாதி போனசைப் பிடித்துக் கொண்டு போனஸ் சீட்டுகள் வழங்கப்படலாயின- வாட்டர் மில்லில் ரீலிங் டிப்பார்ட்மெண்டில் வேலை செய்யும் பெண்களில் பாதிப்பேர் சீட்டை மறுத்தனர். டைம் கீப்பர்கள் வந்து பயமுறுத்திச் சீட்டை வாங்கும்படி செய்தனர், மதுரை முறைகள் இங்கும்கையாளப்படுகின்றன.

இந்த நிலைமை விக்கிரம சிங்கபுரத்தில் நீடிப்பது சரியாகாது. தொழிலாளிகளின் விருப்பத்திற்கு மாருக போனசில் பாதி பிடிப்பதைவிட முழு போனஸையும் வழங்கி உற்பத்தி தங்குதடையின்றி நடைபெறுவது தான் நாட்டுப் பாதுகாப்பின் உடனடித் தேவையாகும், இதற்கு முட்டுக்கட்டை போடப் பார்க்கின்றனர் மில் மானேஜ்மெண்டும் ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடுவும். சர்க்கார் இதில் தலையிட்டு மில் நிர்வாகத்தைக் கட்டுப் படுத்தியாக வேண்டும். இவ்வாறு நிர்ப்பந்திக்ககூடியது விக்கிரமசிங்கபுரம் தொழிலாளர்களின் ஒற்றுமைதான். ஒன்றுபட்ட தொழிலாள வர்க்கம் உரிமைகளைப் பெற்று நாட்டைக் காக்க ஒவ்வோரிடத்திலும் இன்று முன் வந்துள்ளது.

---

தூத்துக்குடி

## நாசவேலை காங்கிரஸ் வேலையல்ல

தூத்துக்குடியில் காந்திஜியின் கடிதங்கள் வெளியானபிறகு, தேசபக்தர்களிடையே பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. ஒரு காங்கிரஸ் வாதி, நாசவேலைகள் காங்கிரஸின் திட்டம் என்று நம்பி வந்தார். அவர் காந்திஜியின் உண்ணுவிரதத்திற்குப் பிறகு அவர் நம் தோழர் ஒருவரை அழைத்துச் சொன்னராம். ''காங்கிரஸ் வாதிகளில் காந்திஜியின்சீடர்கள் என்று அழைத்துக் கொள்ளும் எங்களைக் காட்டிலும் நீங்கள் தான் காந்திஜியின் மனப்பான்மையை நன்ருகத் தெரிந்திருக்கிறீர்கள்''. அவருக்கு நம் கட்சியைப் பற்றி வெகு சந்தோஷம்.

உண்மை தேசபக்தர்களுக்கு சளைக்காமல் உண்மையை எடுத்துச் சொன்னல் ஐந்தாம் படைக்கு அவர்கள் இரையாகாமல் காக்கமுடியும். அதிலும் காந்திஜியின் கடிதங்கள் கண்ணுடி போல் களங்கமின்றிக் காட்டுகிறது. காந்திஜியின் பெயரால் தேசபக்தர்கள் நாசவேலையை நிறுத்துவார்கள். நிச்சயம்.

யுத்த விமர்சனம்

[எம். ஆர். வெங்கட்ராமன்

# நாஜிகள் அழிவது நிச்சயம்

இரண்டாம் போர் முனை இன்னும் ஏற்படாதது எத்தகைய ஆபத்து என்பதை சென்ற இரண்டு வார நிகழ்ச்சிகள் உலக மக்களுக்கு உணர்த்தி விட்டன. செஞ்சேனையின்முன்னேற்றத்தைத் தடுக்க பிரான்ஸிலிருந்தும் பெல்ஜியத்திலிருந்தும் புதிதாக 12 பட்டாளங்களை ஹிட்லர் ரஷ்யப் போர்முனைக்கு அனுப்பமுடிந்தது. அவசர அவசரமாக 25 பட்டாளங்களைக் கொண்டு ஹிட்லர் கார்க்கோவ் அரங்கத்தில் எதிர்த்தாக்குதலை நிகழ்த்த முடிந்தது. தாற்காலிகமாக செஞ்சேனை கார்க்கொவிலிருந்து டோனெட்ஸ் பிரதேசத்திற்குப் பின்வாங்க நேரிட்டது. உலக மக்கள் இந்த நிலைமையை உணருகின்றனர். இரண்டாம் போர்முனைக் கிளர்ச்சி இன்னும் வலுத்துவிட்டது. காஸெப்ளாங்காவில் செய்த முடிவுகளை ரூஸ்வெல்டும் சர்ச்சிலும் எப்பொழுது நிறைவேற்றப் போகிறார்கள் என்று பிரிட்டிஷ் அமெரிக்க மக்கள் நெருக்குகின்றனர். மக்களுக்கு ஏதாவது பதில் சொல்லியாக வேண்டுமே என்ற நிர்ப்பந்தமே ஈடனை அமெரிக்காவுக்கு விரட்டியிருக்கிறது.

## நாஸிகளின் பலஹீனம்

ஹிட்லர் கார்க்கோவில் முன்னேறியதைப்பற்றி பத்திரிகை நிருபர்கள் பரப்பும் செய்திகள் என்ன! இன்று சோவியத் முன்னேற்றம் நாளை நாஸி முன்னேற்றமென யுத்தம் இங்குமங்குமாகத் திரும்பிக்கொண்டிருக்கு மென்பதே அவர்கள் கூறுவதின் சாராம்சம்; இரண்டு வருடங்களுக்கு முன் இதே நிருபர்கள் சோவியத் யூனியன் தோல்வியுறும், நாஸிகளைக் கட்டிப்பிடிக்க முடியாது என்று நினைத்தனர். இன்று சோவியத்தும் ஜெர்மனியும் சரிசமமாக யுத்தத்திலிருப்பதாக அபிப்பிராயம் கொடுக்கின்றனர். ஆனால் உண்மை என்ன!

இரண்டு வருடத்திற்கு முன் ஹிட்லர் 2000 மைல் நீளமுள்ள போர்முனையில் தாக்கினான். மாஸ்கோ வாயிலிலும் லெனின்கிராடருகிலும் அவன் படைகள் நிறுத்தப்பட்டன. சென்ற வருடம் 400 மைல் முனையில் காகஸஸ் எண்ணெயைக் கைப்பற்றத்தாவிக் குதித்தான். ஸ்டாலின் கிராட் வரை முன்னேறினான். ஆனால் ஸ்டாலின்கிராட் ஜெர்மன்படைகள் சவக்குழியைத தான் கண்டனர்; எண்ணைக் கனவில் மண் விழுந்தது. நவம்பர் மாதத்திலிருந்து ஜெர்மன் படைகள் டான் பிரதேசத்திலிருந்து விரட்டப் பட்டுப் பின்வாங்கின. இன்று சுமார் 40மைல் போர்முனையில்தான் ஜெர்மன் எதிர்த்தாக்குதல் சாத்தியமாயிருக்கிறது.

1941-ல் ஹிட்லருக்கிருந்த சைன்ய பலம், ஆயுத பலம் என்ன இன்றிருப்பது என்ன? இரண்டு வருடங்களுக்கு முன் வெற்றி வெறியிலிருந்த ஹிட்லரைக் கண்டு யாரும் அஞ்சினார்கள். முஸோலினிக்கும் ஹிட்லருக்கும் அன்றிருந்த பரஸ்பர ஒத்துழைப்பு இன்று இருக்கிறதென்று கூற முடியாது.

## ஹிட்லர் தப்பமுடியாது

ஹிட்லர்அடிமைப்படுத்தியநாடுகளிலெல்லாம் இந்த இரண்டுவருடகாலமாக புரட்சி சக்திகள் கொஞ்சங்கொஞ்சமாய் வளர்ச்சியடைந்து வந்து ஹிட்லர் வீழ்ச்சியில் பங்கெடுத்துக்கொள்ளத் திரண்டுநிற்கின்றன. ஆனால் இந்த இரண்டுவருடகாலத்திற்குள் சோவியத் நாடு எவ்வளவோ ஆள் நஷ்டம் பொருள் நஷ்டம் அடைந்தும், பிரதேசங்களை இழந்தும் உறுதியிலும் போர்த்திறனிலும் பிரமாதமாக வளர்ந்திருக்கிறது. நாஸிகளை அடியோடு அழிக்கும்வரை ஒரு ரஷ்யனும் உறங்கமாட்டானென்பது நிச்சயம். சோஷலிஸ்ட் சமூக அமைப்பின் காரணமாக யுத்த உற்பத்தியும் சோவியத் நாட்டில் என்றுமிராதவாறு பெருகிகிறது. செஞ்சேனை இன்று அசாத்திய பலத்துடன் விளங்குகிறது. தட்டித்தடுமாறும். நாஸிச் சைன்யங்கள் செஞ்சேனைக்கு முன் நிற்பது துர்லபம்.

இப்பொழுது தெற்கு அரங்கத்தில் சோவியத் முன்னேற்றம் தடைப்பட்டு நிற்பதற்கு சீதோஷ்ண ஸ்திதியும் ஒரு காரணம். பனிக்கட்டி உருகும் சந்தர்ப்பம், எங்குபார்த்தாலும் சேரும் சகதியும்தான் தரை கெட்டியானவுடன் விரைவில் செஞ்சேனை முன்னேற ஆரம்பித்துவிடுமென்று உறுதியாய்க்கூறலாம். வடக்கு போர்முனையில் செஞ்சேனையின் முன்னேற்றம் நடைபெறுவதே இதற்குப் போதிய அறிகுறி. தெற்கு அரங்கத்தில் எவ்வாறு முன்னேற்றம் நடைபெற்றதோ அதேமாதிரி வடக்குப்போர் முனையில் லெனின் கிராடிலிருந்து ஓரெல் நகர்வரை, சுமார் 500 மைல்நீளத்தில் டிமோஷெங்கோவின் தலைமையில் சோவியத் படைகள்முன்னேறிக் கொண்டுவருகின்றன.

## ஸ்மாலென்ஸ்க்கின் விடுதலை நெருங்குகிறது

ஸ்மாலென்ஸ்கை நோக்கிச் செல்லும் முன்னேற்றம்தான் விசேஷமாய்க் குறிப்பிடவேண்டியது. ரிஜெவ், வியாஸ்மா பிடிபட்டதோடு மாஸ்கோவைத் தாக்கத் தயாராயிருந்த போர்த்தளங்கள் தகர்க்சப்பட்டன. அதே சமயத்தில் ஸ்மாலென்ஸ் விடுதலை நெருங்குவதும் சாத்தியம். பின்வாங்கும் ஹிட்லர் சைன்யங்கள் மறுபடியும் திரும்புவதாக இல்லை. இறுதியாக ரஷ்ய நாட்டிலிருந்து விரட்டப்படுவதை இன்று உணருகின்றனர். அதனால்தான் வியாஸ்மா வொரோனெஷ் போன்ற நகரங்களையெல்லாம் சுட்டெரித்துச் சாம்பலாக்கிச் சென்றிருக்கின்றனர். ஸ்மாலென்ஸ்க் நகரை செஞ்சேனை நெருங்குகின்றதென்று தெரிந்தவுடன் அந்தப்பிரதேசத்தையும் சுடுகாடாக்கும்வேலையிலிறங்கியிருக்கின்றனர்நாஸிப் பேய்கள்.

ஆனால் என்ன செய்தபோதிலும் செஞ்சேனையின் முன்னேற்றத்தைத் தடுக்கமுடியாது. "மத்திய அரங்கத்தில் முன்னேறுக! நாஸிகளை அழிப்பதற்கு வேண்டிய சாதனங்களனைத்தும் நம்மிடம் இன்று இருக்கிறது" என்று கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டி அங்கத்தினர் தோழர் மிடின் இவ்வாரம் குறிப்பிட்டார். இரண்டாம் போர்முனை இன்றே ஏற்பட்டால் ஹிட்லர் இன்று இரு போர்முனைகளில் நிலைமையை சமாளிக்கவே முடியாது.

## போல்ஷவிக் பூச்சாண்டி

இதை இன்று ஹிட்லரின் பேச்சிலிருந்தே காணலாம். "ஆசியாக் கண்டம் ஐரோப்பாவை விழுங்கிவிடாமல் காத்திருக்கிறேன். போல்ஷெவிஸத்திலிருந்து ஐரோப்பிய நாகரீகத்தைக் காத்திருக்கிறேன், அட்லாண்டிக் சாஸனம் என்றெல்லாம் பேசிக்கொண்டு இருக்கவேண்டாம்'. என்று ஒப்பாரி வைக்கிறான். சோவியத் எதிர்ப்புக்கு உலக ஏகாதிபத்தியத்தை அறைகூவி அழைக்கிறான், இந்திய விடுதலையை மறுக்கும் அதே பிற்போக்குக் கும்பல்தான் இன்று இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் இரண்டாம் போர்முனைப் பிரச்சினையைத் தட்டிக் கழிக்கப் பார்க்கின்றன. சோவியத் வெற்றியைக் கண்டு திகிலடைகின்றன. அவர்கள் பிற்போக்கு சூழ்ச்சிகள் பலித்துவிடாமல் சோவியத் வெற்றியுடன் உலக மக்களின் விடுதலையும் வரவேண்டுமானால் உலகமக்கள் "இந்திய விடுதலை—இரண்டாம் போர் முனை இவ்விரண்டும் உடனே ஏற்படும்படி ஏகாதிபத்தியவாதிகளை நிர்பந்தித்தாக வேண்டும். அவ்வாறு நிர்பந்தித்தும் வருகின்றனர்.

# போர்முனையில் 'குடியரசு'

(8-ம் பக்க தொடர்ச்சி)

திணறிற்று. மெள்ள கொஞ்சம் நகர்ந்தது; நின்றுவிட்டது.

"ட்ரெட்டில்' அடிபட்டிருக்கிறது" என்று யுத்தத்தின் பேரிறைச்சலுக்கு மேல் கேட்கும்படியாக மிகொலே உரக்கச் சொன்னார். ரிஸிகாவ் தலையை அசைத்தான். இரண்டாவது மெஷின் துப்பாக்கியண்டை அவர்கள் உட்கார்ந்தனர். அசைவற்ற அந்த டேங்கு வெண்மையான மரத்தண்டுகளுக்கும், பசுமையான இலைகளுக்கும் இடையே பெரிய பாருங்கல் மாதிரி நின்றது.

ஓ!......ஓ!

வேதனையில் அனத்தும் இச்சப்தம் உடனே ரிஸிகாவின் காதில் விழுந்தது. தன் உடம்பிலிருந்து பிய்த்ததுபோல் தோன்றிற்று.தனக்கு நேரெதிரேசண்டைபோட்டுக் கொண்டு முன்னேறி வந்தனர் நாஜிகள். அவர்களுடைய முகங்கள் ரிஸிகாவிற்குத் தெரிந்தது. சிவந்த முகங்கள். ரத்தம் சொறிந்து இன்னும்சிவந்திருந்தன. ஆவென்று திறந்த வாய்கள்; கூச்சலிட்ட வாய்கள். வழக்கம்போல் குடித்திருந்தனர்: குடிவெறியின் உச்சத்தில் இருந்தார்கள். மரணம் நிச்சயம். இருந்த போதிலும் நிகரின்றி வெறிகொண்டு முன்னேறினர். ரிஸிகாவ் சற்றுத் தலையைத்திருப்பிப்பார்த்தார். அவருடைய இரு தோழர்களும் கண்களில் கை வைத்திருந்தனர். அவர்களுடைய மெஷின் துப்பாக்கிகள் சும்மா இருந்தன. பிங்களஸ்டீனின் விரல்களுக்கிடையே ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது.

"என் கண்கள், என் கண்கள், என் கண்கள்" என்று தாழ்ந்த குரலில் மிகொலே அனத்திக்கொண்டிருந்தார்.

ரிஸிகாவிற்கு மயிர் கூச்செறியும் திடீர் நடுக்கம். காயம்பட்ட தோழர்கள் பக்கம் திரும்பினார்; அப்பொழுதுதான் ஜெர்மானியரின் இறைச்சலும் அதிகரித்தது. தன் மெஷின் துப்பாக்கிக்கு அடித்து மோதிச் சென்றார். ஆம் ஜெர்மனி மக்கள் எதுவும் நிகரின்றி முன்னேக்கி வந்தனர்.

"ஸ்பேர் பெல்ட்டுகளை தயாராக எடுத்து வை. எனக்குக்கொடுத்துக் கொண்டிருக்க முடியுமா?"

பிங்களிஸ்டீன் தடவிக்கொண்டு ரிஸகாவினிடம் வந்தார். நடுங்கும் விரல்களில் மிகொலே கார்ட்ரிட்ஜுகளின் கிலிப்புகளைத் தேடிக்கொண்டிருக்கிறதார்.

"ஸ்பேர் பெல்ட்டுகளைத் தயார் செய். ஸ்பேர் பெட்டுகளைத் தயார்செய்—என்ன! செய்ய முடியுமா?"

"இமை கொட்டுவதற்குள் நான் அவற்றை கொண்டு வருகிறேன்"

ரிஸிகாவ், அவர்களுடைய ரத்தக் கறையுள்ள விரல்களைப் பார்க்கவில்லை. அவருக்கு பின்னிருந்த அவர்கள் நீண்ட மூச்சுவிடுவது காதில் விழுந்தது. சரிவிற்குப்பின்னாலிருந்து வந்த ஜெர்மனியர்களை நோக்கி விடாமல் சுட்டுக்கொண்டேயிருந்தார்.

"இந்தா இன்னும்; இன்னும்"

விடாமல் அவருக்கு குண்டுகளைக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள். பிங்களஸ்டீன் நீண்ட மூச்சு விட்டுக் கொண்டிருந்தார் ஒவ்வொரு விநாடியும் அனத்திக் கொண்டிருந்தார் மிகொலே குழந்தைகளின் கீச்சுக் குரலில் கதறினர்.

"படால்!" இரண்டாம் முறை டேங்கு குலுங்கிற்று. ரிஸிகாவ் சபித்தாள்.

"இதிலிருந்து வெளியில் போவோம். இறங்கு...டேங்கிற்கு பின்னாலிருந்து கொண்டு இவர்களை ஒரு கை பார்ப்போம்"

"கொஞ்சம் பொறு—நான்...

அவர்களுக்கு ஒன்றும் கண்ணுக்குத் தெரியவில்லை. கண் குருடாய் போய்விட்டது. சுத்தமாகக் கண் தெரியவில்லை. ஆனால் இந்தச் சமயத்தில் ரிஸிகாவ் அவர்களைப் பார்த்தும் எள்ளளவும் பரிதபிக்கவில்லை. அடங்காக் கோபம்தான் வந்தது. சுத்த மடையர்கள்! மாட்டிக் கொண்டு விழிக்கும் இச்சமயத்தில் கண்ணையிழந்து கொண்டு நிற்கிறார்கள்! அவர்கள் கண்கள் எங்கே! என்ன ஆயிற்று? அதுவும் இப்பொழுது தான் ஆளுக்குமேல் ஆள் வேண்டியிருக்கிறது.

டேங்கிலிருந்து தட்டித்தடுமாறி ரிஸிகாவ் வெளியில் வந்தார். மிகொலாவின் சட்டையின் நுனியைப்பற்றி இழுத்தார்.

"இந்தப் பக்கம். இதோ, இந்தப் பக்கம்".

சீர்கெட்ட டேங்கிலிருந்து இரும்புத் தகடுகளையும் ட்ரெட்டுகளையும் இறுகப்பிடித்துக்கொண்டு, கையில் தடவிப் பார்த்துக் கொண்டே கண்ணிழந்த இருவரும் தள்ளாடிக்கொண்டு இறங்கினர்.

"இறங்கு!"

"ஜெர்மனியர்கள் எங்கே!" என்று பிங்களஸ்டீன் கரகரத்தகுரலில் கேட்டார்.

"நேர் உன் எதிரில். கண் தெரியவில்லை?"

"எனக்கு ஒன்றையும் பார்க்க முடியாது" என்று பிங்களஸ்டீன் தழதழத்த குரலில் கூறினர்.

"நேராக உனக்கு எதிரில். உன் முகரக் கட்டைக்கு நேர்முன்னுக" என்று ரிஸிகாவ் எரிந்து விழுந்தான்; துப்பாக்கியின் விசையை இழுத்தான்.

சிறுகுன்றும், டேங்கும் மறைவிடமளித்தது. சண்டை போடுவதற்கு அது அருமையான ஸ்தலம். தரையோடு தரையாய் குப்புறப் படுத்துக்கொண்டு சுட ஆரம்பித்தார்.

உக்ரமான யுக்தம் துவங்கிற்று. காதடைக்கும் யுத்தப் பேரிறைச்சல். ஆனால் ஜெர்மன் தாக்குதல்வேகம் குறைய ஆரம்பித்தது. ஒரு ஓரமாக திடீரென்று காடுகளினூடேயே இருந்து ஒரு டேங்கு கிளம்புவதை ரிஸிகாவ் கண்டார்; ஒரு நொடியில் அது ஜெர்மனியர்களுக்கு நடுவில் காணப்பட்டது.

"பின்னால் சென்று வளைத்துக்கொண்டோம். பின்புறமாகச் சென்று அவர்களை வளைத்துக்கொண்டோம்" என்று உற்சாகத்துடன் கத்தினர் ரிஸிகாவ்.

ஜெர்மனியர்கள் முன்னேறிப் போவதா, அல்லது பின்வாங்குவதா என்று முடிவு செய்யாமல் ஊசலாடிக்கொண்டிருந்தனர். பிறகு திடீரென்று பீதியில், அல்லோல கல்லோலமாய் பின்வாங்க ஆரம்பித்தனர். ரிஸிகாவ் குதித்தெழுந்தார்.

"அவர்கள் ஓட்டமெடுக்கிறார்கள், ஓட்டமெடுக்கிறார்கள். ஓட்டமெடுக்கிறார்கள்".

ரிஸிகாவ் உடம்பெல்லாம்புழுதி,ரத்தம்; களைப்பினால் கிறுகிறுவென்று வந்தது. திடீரென்று அளவிலா சந்தோஷம். ஜெர்மனியரின் பின்னணியில் போன டோங்குகளைத் தொடர்ந்து காலாட் படைகளும் முன்னேறின. ஜெர்மனியர்கள் யுத்தத்தை நிறுத்தினார்கள். வெடிகுண்டுகள் துப்பாக்கிகள் வெடிக்கும் சப்தம் நின்றது. முடிவில் எங்கும் நிசப்தம், காடுகளிலும் வயல்களிலும்.

"ஏய் குடியரசு எங்கே யிருக்கிறீர்கள். உங்களுக்கு என்ன ஆயிற்று உங்கள் 'குடிசை' நாசமாயிற்ரு என்ன?"

அவர்களுடைய தளகர்த்தர் அவர்கள் பக்கமாக வந்தார். அச்சிறு கூட்டத்தை ஆச்சரியதுடன் நோக்கினார்.

"பிங்களஸ்டீன், உனக்கு பைத்தியம் பிடித்திருக்கிறதா? என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்!"

ரிஸிகாவ் திரும்பிப்பார்த்தார்: மற்ற இருவர்மிகொலா பிங்களஸ்டீன்—ரிஸிகாவ் எழுந்த குன்றிற்குப் பின் இன்னும் படுத்துக்கொண்டு இருந்தனர். ஒருவர் தோளில் ஒருவர் தோளைவைத்துக்கொண்டு, கைகளைக் கொண்டு தடவி ஒருவருக்கொருவர் உதவிக்கொண்டு, ரிவால்வரில் குண்டுகளை போட்டுக்கொண்டு, ஒரு நிமிஷத்திற்கு முன்வரை ஜெர்மானியர்கள் இருந்த இடத்தை நோக்கி சுட்டுக்கொண்டே இருந்தார்கள். கண்களிருந்த இடத்திலிருந்து தாரை தாரையாக சொரிந்து கொண்டேயிருந்தது. அடங்கா உணர்ச்சி, அளவு கடந்த மனஉறுதிஇவற்றின் குறிகள்நிமிர்ந்திருந்த அவர்களுடையமுகங்களில் காணப்பட்டது.ஒளியிழந்த கண்களில் கண்ணுக்குதெரியாத விரோதியை நோக்கிஉற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். படீரென்று ஒருதரம் சுட்டதும், பிங்களிஸ்டனின் நெஞ்சின் அடியிலிருந்து கிளம்பிய புலம்பல் கேட்கும். மிகொலே புலம்பாமல் சுட்டுக் கொண்டிருந்தார். அவரது வெண்மையான பற்களால் கீழுதடை கடித்துக்கொண்டு இருந்தார்: அதிலிருந்து ரத்தம் சொட்டிற்று.

"என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்-பைத்தியம் பிடித்து விட்டதா!"

"அவர்கள் இருவரும் கண்ணிழந்தனர்" என்று ரிஸிகாவ் கரகரத்த குரலில் விளக்கினார்.

(2-ம் பக்க தொடர்ச்சி)

யிலே சமரசம் வேணும்கரவர்கள் ஷியாமபிரசாத் முகர்ஜி, தயால் போன்றவர்களுக்கு தைரிய மேற்படும்—ஆதரவு அதிகரிக்கும்.

குப்பு: இல்லாட்டிப்போனா, சும்மாவே லீக் இருந்திட்டிருந்தா, அகண்ட ஹிந்துஸ்தான் பாட்டுபடிக்கும் வைஸ்ராய், சவர்க்கார்ளுக்குக் கொண்டாட்டம். வைஸ்ராயிக்கு காங்கிரஸும் லீக்கும் சேரக்கூடாதுங்கரதுதானே.

ராம: அதனால் எல்லாக் கட்சியும் காங்கிரஸையும் லீக்கையும் சேர்த்த வேலை செய்யணும். காந்திஜீ வெளியிலேவந்தபிறகூனு இருக்கக்கூடாது. அவருக்கு விடுதலை கிடைக்கறத்துக்கே இரண்டு கட்சிகளும் ஒன்று சேரனும், நாட்டைக் காக்கணும்ணு எல்லாக் கட்சிகளும் இந்த வேலையிலே முனையவேண்டும்.

சீதா: அப்பா,அம்மா சாப்பிடகூட்டிட்டு வரச் சொன்னு.

குப்பு: நான் போயிட்டு வரணுங்க நாளைக்குப் பார்க்கலாம்.

# ★ போர் முனையில் 'குடியரசு' ★

—தோழர்—
**வண்டா வாஸிலவ்ஸ்காயா**

"ஏ! 'குடியரசு,' சாப்பாடு வாங்கிக் கொள்ளுங்கள். வாருங்கள்!

"இதோ நாங்கள் வந்துவிட்டோம்" என்று ரிஸிகாவ் பதில் கூறினர், இணைபிரியா மூவர் உணவு அருந்த சமையலறைக்குச் சென்றனர்.

தளகர்த்தர் 'குடியரசு' எங்கே என்று கேட்பார். உடனே எந்த செஞ்சேனை சிப்பாயும் சற்றும் யோசிக்காமல் அந்த க்ஷணமே பெரியதொரு டாங்கியைச் சுட்டிக்காண்பிப்பார்.

அவர்கள் மூன்றுபேர்—ஒரு யுக்ரேனியர், ஒரு ரஷ்யர், ஒரு யூதர். இவர்கள் அந்த டாங்கியில் வேலைசெய்தார்கள். ஒருவரையொருவர் பிரிவதில்லை. டாங்கியில் இருக்கும்பொழுதுமட்டுமல்ல. அவர்கள் எங்குசென்றாலும் சரி, அப்படித்தான். அடுத்து அடுத்துப் படுத்துத் தூங்குவார்கள். ஒரே சமயத்தில்தான் சாப்பிடுவார்கள். உட்கார்ந்து மணிக்கணக்காக பேசிக்கொண்டேயிருப்பார்கள்.

"என்னதான் பேசுவீர்கள், மணிக்கணக்காகக் கூடிகூடிப் பேசிக்கொண்டிருக்கிறீர்களே, சலிப்பு ஏற்படவில்லையா?"

பிங்ளஸ்டீன், ரொம்பவும் வெட்கப்படக்கூடியவர். முகம் சிவந்த வண்ணம், புன்னகையுடன் "எப்படி சலிக்கும் பல விஷயங்களைப்பற்றிப் பேசுகிறோம்...... எங்களுக்குள்ளேயே தானே பேசிக்கொள்ளுகிறோம். உங்களுக்கு யாருக்காவது இடைஞ்சலாக இருக்கிறதா!"

அம்மூவர்களுள் உண்மையிலேயே அதிகமாகபேசுவதெல்லாம் பிங்களஸ்டீன்தான். மிகொலா மற்றவர்கள் பேசுவதை கேட்டுக்கொண்டேயிருப்பார். விழுந்து விழுந்து சிரிப்பார். ரிஸிகாவ் அடிக்கடி முகம் வாடியவண்ணம் கவலையில் ஏதாவது சிந்தித்துக்கொண்டிருப்பார்.

"நினைத்துப் பார்த்தோமானால்—வாழ்க்கையைத் தான் எடுத்துக்கொள்ளேன். என்னை பொருத்தவரையில், வாழ்க்கையில் எனக்கு அசாத்ய பிரேமை. எல்லாம் எவ்வளவு அருமையாக இருக்கமுடியும் நம்முடைய தேசம், அப்பா,! எவ்வளவு அற்புதமான தேசம், நம் நாட்டுமக்களோ—அதை உங்களுக்குச் சொல்வானேன்—உங்களுக்குத் தெரியும் எத்தகைய அபூர்வமான மக்கள் என்று; வருஷாவருஷம் நாடு அபிவிருத்தி அடைந்துவந்தது. வருஷத்திற்குப்போவானேன். மாதாமாதம் முன்னேறிவந்தது....ஆனால் இப்பொழுதோ..."

"அது தெளிவாகத்தானிருக்கிறது" என்று பிங்களஸ்டீன் பெரிய தொரு பிரசங்கம் ஆரம்பித்தார். "முதலாளித்வம் இருக்கும் வரையில் யுத்தம் இருந்துகொண்டு தானிருக்கும். முதலாளித்வ நாடுகளால் நாம் சுற்றி வளைக்கப்பட்டிருக்கும் வரை யுத்த மேகம் இருந்துகொண்டுதானிருக்கும்".

ரிஸிகாவ் கவனித்துக்கேட்டார் 'ஆமாம்' என்று தலையை அசைத்தார்.

"அது தெற்றத் தெளிவாகத்தானிருக்கிறது" என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு சொன்னார். "அதை நன்கு உணர்கிறேன். அதற்கொன்றும் பிரசங்கம் தேவையில்லை. ஆனால், என்ன வென்றால் மூளைக்கு அது எட்டுகிறது. அது வேறு விஷயம். ஆனால் இதற்கு முற்றிலும் மாறான சமாசாரம்......உம், அதை நினைக்கத்தொடங்கிவிட்டால் மனுஷனுக்கு கவலைதான் வருகிறது."

"அது ஏன் என்றால் இங்கே சும்மா உட்கார்ந்து கிடக்கிறோம் பார்" என்று மிகொலா தாழ்ந்தகுரலில் குறுக்கிட்டார்.

"அது, நீ வேறு என்ன எதிர்ப்பார்க்கிறாய்......குண்டுகள் காதோரத்தில் குய்யென்று பிய்த்துக்கொண்டு போகும் போது இதைப்பற்றியெல்லாம் நினைக்க நேரமெங்கே"?

"என்னைப் பொருத்தவரையில்"—பிங்களஸ்டீன் முகஞ் சிவக்க வெட்கத்துடன், ஒப்புக்கொண்டார் — அப்பொழுதுதான் எனக்கு நினைப்பெல்லாம் வருகிறது".

"எதைப்பற்றி!"

"எதைப்பற்றி அல்ல, அவளைப்பற்றி... அவளை மறக்கவே முடியவில்லை...அவள் பெயர் 'சான்யா'."

"உன் மனைவியா!"

"ஆஹா......எனக்கு அவளைப்பற்றியே தான் ஞாபகம்."

"அவள் எப்படி யிருப்பாள்" என்று மிகொலோ ஆவலாகக் கேட்டார்.

"என் மனைவி, சான்யா——சான்யா, அவள் மிகப் பொடிசு......என் தோளுக்குத்தானிருப்பாள். மயிர் கருப்பாயிருக்கும்; கண்கள் கருப்பு. அந்தமாதிரி கரிய கண்கள் நீ கண்டிருக்கமாட்டாய். அவள் புன்சிரிப்புச் சிரித்தால், கன்னத்தில் குழி விழும்".

"அப்படியா!" மிகொலா அதை ஊர்ஜிதம் செய்தான்.

"சிறுவட்டமான குழியா!"

"ஆனால் உனக்கு அவளைத் தெரியாது" என்று சஞ்சலத்துடன் சொன்னான் பிங்களஸ்டீன்.

"யாரைத் தெரியாது என்கிறாய்?"

"சான்யாவைத் தான்".

"சே! சான்யாவைப்பற்றி நான் சொல்லவில்லை, காஷாவைப்பற்றி".

"ஓகோ!" ரிஸிகாவ் பெருமூச்சு விட்டான்.

"எனக்கு இரண்டு குழந்தைகளிருக்கின்றன. பெண் ஒன்று, ஆண் ஒன்று; அருமையான குழந்தைகள்".

"பெரிய குழந்தைகளா!" என்று மிகொலே அக்கரையாகக் கேட்டார்.

"ஆறும், ஏழும் ஆகிறது. பையன் எப்பொழுதும் குறும்புத்தனம் செய்துகொண்டே யிருப்பான். என் மனைவி அவனை எப்படி வைத்துத் தாட்டுகிறாளோ .........என் பெண்!.........அற்புதமான சிறு பெண். அவள் [illegible]வ்வளவு இனிமையாகப் பாடு[illegible] தெரியுமா! சீக்கிரம் [illegible]பரெடுத்து விடுவாள்; குயில் போன்ற குரல்."

"அவர்கள் வீட்டில் என்ன செய்துகொண்டிருக்கிறார்களோ" வென்று பிங்களிஸ்டீன் யோசிக்கத் தொடங்கினர்.

"வீட்டில்தானே! இதோ நான் சொல்கிறேன். என் மனைவி கால்யாவின் ஸ்டாக்கிங்ஸை தெய்த்துக்கொண்டிருப்பாள். அவன் மறுபடியும் கிழித்திருப்பான். அது எனக்கு நிச்சயமாக தெரியும். எப்படித்தான் கிழியுமோ பகவானே, எனக்குத் தெரியவில்லை. மிகொலாவினுடைய காஷா, வயலிலிருப்பாள், அறுவடைகாலம் பாருங்கள்......சன்யா?"

"சன்யா தொழிற்சாலையிலிருக்கிறாள்; நிட்டிங் தொழிற்சாலையில் வேலைசெய்கிறாள். என் தகப்பனாரும் அங்கேதான் வேலையிலிருக்கிறார்; நெசவு வேலை. எனக்குத் தாயாரில்லை. வெகுநாட்களுக்கு முன்பே இறந்துவிட்டாள். எனக்கு அவளை ஞாபகம் கூட இல்லை. நான்தான் எல்லோருக்கும் இளையவன்......"

"உனக்கு அண்ணன் தம்பி, அக்காள் தங்கை யாராவது இருக்கிறார்களா!"

"இருக்கிறார்கள். என் அக்காள் லேடி டாக்டர். என் அண்ணனும் இராணுவத்தில்தான் இருக்கிறார்...எந்த இடம் என்று தெரியாது. கிழக்குப் பிரதேசத்தில்...... நாங்கள் மூன்றுபேர். எனக்கு இன்னொரு அண்ணனும் இருந்தார். ஆனால் அவர் இறந்துபோனார்.

"இந்தாப்பா, பிங்களஸ்டீன், யுத்தம் முடிந்ததும் என்ன ஆகும் என்று நினைக்கிறாய்!"

"யுத்தம் முடிந்த பிறகா? அதுதானே, பலவிஷயங்களைப் பொருத்திருக்கிறது. ஜெர்மன் தொழிலாளி வர்க்கம்......"

அவர்கள் கவனமாக கேட்டார்கள்.

"பிங்களஸ்டீன், உனக்கு ரொம்பத் தெரியும்...நீ ஒரு வாசகசாலையில் உட்கார்ந்து படித்துக்கொண்டும் நோட்டில் குறிப்புகள் எடுத்துக்கொண்டும் இருக்க வேண்டும்...ஒரு புரபஸர் அந்தமாதிரி, ஏதாவது இருக்கவேண்டியவன்......டேங்கில் அல்ல".

அடக்கத்தை குறிக்கும் புன்சிரிப்பு பிங்களஸ்டீன் முகத்தில் தோன்றிற்று.

"அதைப்பற்றியும் நானும் நினைத்தேன் ......ஒரு புரபஸர்......என் தகப்பனார் விடாமல் சொல்வதுண்டு. ஷ்மல் உனக்கு நல்ல மூளை......என்ன அபார மூளை!"

"இன்னுங்கூட நீ புரபஸர் ஆகலாம் ......ஆனால் யுத்தம் முடியும்வரை காத்துக்கொண்டிருக்கவேண்டும்..."

"ஆமாம், அது வாஸ்தவந்தான், யுத்தம் முடிந்ததும்......"

"நான் இன்னும் படிக்கவேண்டியது ரொம்ப இருக்கிறது; அசாத்தியமிருக்கிறது".

"என்னை பொருத்தவரையில் யுத்தம் முடியவேண்டியதுதான், நான் உடனே, முதல்நாளே காஷாவை, கல்யாணம் செய்துகொள்வேன். ஓ! எங்கள் கூட்டுப் பண்ணையில்—குஷி! அப்புறம்; எங்களுக்கு நிறைய குழந்தைகள் பிறக்கும். விவசாயம், விவசாயம்தான் செய்யப் போகிறேன்".

"நான் லெனவுடன் காகஸஸில் சுற்றுப் பிரயாணம் செய்யப்போகிறேன். வெகு நாட்களுக்கு முன்பே நான் போவதாக அவளுக்குச் சொல்லியிருந்தேன். ஆனால் ஒன்றும் சௌகரியப்படவில்லை. யுத்தம் முடிந்தவுடன் நிச்சயமாக சுற்றுப் பிரயாணம் போவோம்".

"யுத்தம் முடிந்ததும்" உணர்ச்சி ததும்ப பிங்களஸ்டீன் சொன்னான். "நாமெல்லோரும் சந்திக்கவேண்டும். என்ன தெரியுமா! நானும் சன்யாவும், மிகொலாவும் காஷாவும், நீயும் உன் மனைவியும் எல்லோரும் கார்காவிற்கு என் வீட்டிற்கு வரவேண்டும்".

"என்னைக் கேட்டால் நீங்கள் எல்லோரும் எங்கள் ஊருக்கு வருவதுதான் சரி; நகரத்திற்கு போவானேன். என் வீட்டில் விருந்தாளிகளா யிருந்து, கிராம வாழ்க்கையை அனுபவிக்கலாம். பச்சை பசேலென்ற புல்வெளி பழத்தோட்டங்கள். எங்களுக்குப் பழத் தோட்டங்கள் உண்டு...ஓ! என்ன சொல்வது! எவ்வளவு ஆப்பில் மரங்கள். ஆஹா அழகான ஆப்பில் மரங்கள். நீ குழந்தைகளை அழைத்து வருவாய், அ[illegible]ளுக்கு எவ்வளவு சந்தோ[illegible]மா யிருக்கும். நீங்கள் [illegible] அந்தஉங்கள்பையன் மரத்திலே ஏறுவான். உங்களுக்கு வேண்டிய அளவு ஆப்பில்களை கீழே விழுக்காட்டுவான்.

"ஆமாம் மறுபடியும் ஸ்டாக்கிங்ஸை கிழித்துக்கொண்டு வந்து சேருவான்...

"அட போப்பா, ஸ்டாக்கிங்குமாச்சு, நீயுமாச்சு!...நதிக்குப் போகலாம். மீன் பிடிக்கலாம். மீன்கள்—அடே அப்பா அங்கே யதேஷ்டம்...ஏய் உங்களுக்கு எங்கள் ஊர் சமாசாரம் ஒன்றுமே தெரியாது.—காஷா அருமையான பட்சணங்கள் செய்துகொடுப்பாள்—விதவிதமான பலகாரங்கள்,

"சாப்பாட்டிலே ஒன்றும் நான் அவ்வளவு தூரத்திற்கு பிரியனல்ல, புல் தரைகளில் கிடந்து உருளுவது, நதிக்கு உல்லாசமாக நடந்து செல்வது–அது பலே குஷீ" என்று பிங்களிஸ்டீன் ஒப்புக்கொண்டான் சன்யாவிற்கு கிராமாந்திரங்களுக்குப் போவதென்றால் ஒரே ஆசை..."

"அப்ப என்ன சொல்றீங்க அதுதான் முடிவு?" ஆம்"

"ஆனால் நாஜிகளை முதலில் நிர்மூலம் செய்யவேண்டும்" "அவர்களை ஒழித்துவிடுவோம்; அதில் ஒன்றும் அஞ்ச வேண்டியதில்லை.

"எனக்குத்தெரியும்...ஆனால் அதை சீக்கிரம் முடித்துத் தொலைக்க வேண்டும்"

"இவனைப்பாரு, ஒரு அவசர குடுக்கையல்லவா!"

"முதல் ஏகாதிபத்ய யுத்தம் எவ்வளவு காலம்..." என்று பிங்களஸ்டீன் ஒரு பிரசங்கத்தை தொடங்கிவிட்டார்.

சைகை செய்து அப் பிரசங்கத்தை ரிஸிகாவ் அப்படியே நிறுத்திவிட்டார்.

"முதல் ஏகாதிபத்ய யுத்தத்தைப் பற்றியெல்லாம் கதை அளக்க வேண்டாம்! அந்தக் காலத்திலே யெல்லாம் இம்மாதிரி டேங்குகள் விமானங்கள் எல்லாம் ஏது! பொதுவாக இன்றைக்குள்ள ஆயுதங்கள் எல்லாம் அன்று கிடையாது. இன்றைய சமாசாரமே வேறு. இப்பொழுதெல்லாம் என்ன வேகத்திலே காரியங்கள் நடக்கின்றன."

"அதை நான் இல்லை என்று சொல்லவில்லை. எல்லாக்காரியங்களும் தலைதெறிக்கும் வேகத்தில் நடக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன்" என்று பிங்களஸ்டீன் சம்மதித்தான்.

"முன்னேறித் தாக்குதல் மட்டும் ஆரம்பித்தால்"' என்று மிகொலே பெருமூச்சு விட்டுச் சொன்னான்.

"சரியானசமயத்தில் ஆரம்பிக்கப்படும்" என்று பிங்களஸ்டீன் உறுதி கூறினான்.

"யுத்தத் தந்திரத்தின் பிரகாரம்..."

"ஏய் குடியரசு ஆசாமிகளா "பால் இன்'"

தங்கள் 'குடிசை'களுக்கு விழுந்து அடித்து ஓடினர். பிர்மாண்டமான சப்தத்தைக் கிளப்பிக் கொண்டு, பெரிய அவர்கள் டேங்கி நகர்ந்தது.

ஆகாயத்தில் உறுமின விமானங்கள்: தூரத்தில் வெடி குண்டை கக்கும் பீரங்கியின் சப்தம். நடுநிசியில் பெரிய காட்டு மிருக மொன்று கத்தும் சப்தத்தைபோலஇருந்தது. குண்டுகள் வெடிக்கும் வெளிச்சம். பெரிய நெருப்பு அணையும்போது பிரகாசிப்பது போல் ஒளிவீசியது. இருட்டில் யாருக்கும் தென்படாமல் காட்டுப்பாதையில் டேங்குகள் நகர்ந்தன: டேங்குகள் ஓடும் சப்தமும், அதின் இரும்பு அங்கங்களின் ஓசையும் வெகு தூரத்திற்குக் கேட்டது. மரக்கிளைகள் பாதையின்மீது தாழ்ந்து தொங்கின. பறவைகள் மிரண்டு இருட்டில் இங்குமங்கும் இறகடித்துப் பறந்தன. என்ன செய்வதென்று தெரியவில்லை போலும். படை முன்னேறிற்று. இரும்பு இயந்திரங்கள் கடகடவென்ற சப்தத்துடன் நீண்ட வரிசையில் பாம்பைப் போல் நெளிந்து நெளிந்து முன்நகர்ந்தன. ஒன்றன்பின் ஒன்ருக வந்த டேங்குகள்—ஊமையும் குருடுமான ராக்ஷசர்கள்.

அன்று காலை யுத்தம் ஆரம்பித்தது. பாதையிலிருந்தவற்றை நொறுக்கிக்கொண்டும் பெரும் சப்தம் செய்துகொண்டும் டேங்குகள் நகர்ந்தன; சிறு மரங்கள் வேரோடு வந்தன; மரத்தண்டுகள் இயந்திரத்தின்கீழ் நொறுங்கின. வழியில் வந்தனவற்றையெல்லாம் நசுக்கிக்கொண்டு சென்றன. மரங்கள் அடர்ந்தகாடு, அறுவடை காலத்தில் விவசாயியுடைய அறுவாளுக்கு பயிர் தலைவணங்குவதுபோல், இயந்திரத்திற்குப் பணிந்து தரைமட்டாமயின. உறுமிக்கொண்டு, ஒரு வெடி சுரங்கம் அவர்க[illegible] ஓரமாக பாய்ந்தது; பாதிவட்ட முட்டு படீரென்று வெடித்தது. குப் பென்று அதில் இருந்து நெருப்பும் கிளம்பிற்று. பீரங்கிகளின் சப்தம் தூரத்திலிருந்து கேட்டது. 'பக் பக்' கென்று மெஷின் கன்கள் சுடும்சப்தமும் கேட்டது,

ஜெர்மனியர்கள் கண்டமாதிரி கத்திக்கொண்டு முன்னேறினார்கள்; கூச்சல் என்ன என்று விளங்கவில்லை. ரிஸிகாவ் கண்ணும் கருத்துமாய் தன் மிஷின் துப்பாக்கியில் உட்கார்ந்து தவருத குறியுடன் ஜெர்மனியர்களை கொன்று வீழ்த்தி வந்தார். டேங்கு குலுங்கிற்று. அதன் இரும்புத் தகடுகள் சூடாயின. டேங்குக்குள்ளே காற்றே கிடையாது. மூச்சுவிடுவது கஷ்டமாயிருந்தது. வெடி மருந்தின் நாற்றம் மூக்கை துளைத்தது. டேங்கு மெள்ள மலையின்மீது ஊறிச்சென்று சிகரத்தை அடைந்து, நிதானமாக மறுபக்கம்சரிவில் இறங்கிற்று. ஒவ்வொரு அடியும் ஊன்றி நகர்ந்தது. சடசடவென்று மரங்கள் விழுந்தன; நொறுங்கின; டேங்குகளுக்கு ஒரு பாதையாகிவிட்டது.

கரகரவென்று நொறுங்கின...ரிஸ்காவுக்குத் தெரிந்தது. மரங்கள் மட்டும் நொறுங்கவில்லை. மனித எலும்புக் கூடுகள், மனித மண்டைஓடுகள், மனிதர்உடம்புகள் நொறுங்கின. "கரப்பான் பூச்சிகளைப்போல்" என்று அருவருப்புடன் ரிஸிகாவ் தனக்குத்தானே நினைத்துக்கொண்டார். அதேசமயத்தில் அவர் டேங்கியைபடீரென்று வெடிக்கும்சப்தத்துடன் ஏதோ தாக்கிற்று. அந்த இரும்பு இராக்ஷசன் நடுங்கினன். அந்த இயந்திரம்

(7-ம் பக்கம் பார்க்க)

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

வரும் ஆபத்தை உலக மக்களிடமிருந்து ஒளிக்கிறது. உண்மை இதுவல்ல அல்ல. பிரிட்டிஷ் மக்களுக்கும், அமெரிக்க மக்களுக்கும் இதை தெரிவிக்காமல் வைத்திருப்பது பெரும்குற்றம்.

## அதிகாரவர்க்கத்தின் அரசியல் சூன்யம்

அதிகார வர்க்கத்தின் சாயம் வெளுத்துவிட்டது. அதுவே அதிகாரவர்க்கம் இப்பிரசுரத்தினுல் அடைந்த பலன். தேசீய சர்க்காரை மறுக்க அடக்குமுறையை ஆரம்பித்தது; செய்தித்தடைகளின் மூலம் இந்தியாவைப்பற்றி உலகத்திற்கு ஒன்றுமே தெரியாமல்போகும் என்று நினைத்து பல தடைகளை ஏற்படுத்திற்று. அதிலெல்லாம் ஒன்றுமே கைகூடாமல் போகவே இந்த அபாண்டப் பிரசாரத்தின் மூலம் தேசீய சர்க்காரை தடைசெய்ய முயற்சிக்கிறது. அதிகார வர்க்கத்தின் அரசியல் சூன்யத்தின் அத்தாட்சி 86 பக்கங்கொண்ட இப்பிரசுரம்.

நாசவேலைக்குப் பொறுப்பு யாருடையது என்பது மக்களுக்குத் தெரியும். தெருவில் போய்க் கொண்டிருக்கும் யாரைக் கேட்டாலும் சொல்லுவார். அப்பொறுப்பு அதிகார வர்க்கத்தைச் சேர்ந்தது. தலைவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்கக்கிளர்ச்சியும் அரசாங்கம் இந்தியர்களுடன் சமரசம்செய்துகொள்ள வேண்டும் என்ற கிளர்ச்சியும் இதனுல் இன்னும் வலிமை பெறுகிறது. அதற்கு சந்தேகமில்லை.

—பீப்பிள்ஸ் வாரில் தோழர் பி. டி. ரணதிவே எழுதிய கட்டுரையைத் தழுவியது.

சென்னை நெ. 2, ஜோன்ஸ் லேனில் "ஜனசக்தி" அச்சுக்கூடத்தில் பி. ராமமூர்த்தியால் அச்சிடப்பட்டுப், பிரசுரிக்கப்பட்டது.